

ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு

21-4

॥ श्रीः ॥







काषायशुक्लाम्बरसंवृताभ्यां काङ्क्षाधिकेष्टप्रदपूजनाभ्याम् ।
कायप्रभाधूतसुधाकराभ्यां नमो नमः शंकरशारदाभ्याम् ॥

மலர் 8
இதழ் 1

பராபவ — ஆடி
1966 ஜூலை — ஆகஸ்டு

॥ श्रीः ॥

जाड्यवारिधिनिमग्नसुबुद्धेः
जातरूपसदृशच्छविकाये ।
वासवादिदिविषत्प्रवरेड्ये
वाणि देहि मम पाण्यवलम्बम् ॥

ஜாட்ய வாரிதி நிமக்ந ஸுபுத்தே:
ஜாதரூப ஸத்ருஶச்சவிகாயே ।
வாஸவாதி திவிஷத் ப்ரவரேட்யே
வாணி தேஹி மம பாண்யவலம்பம் ॥

ஸுவர்ணம்போல் மிக்க ஒளியுடன் கூடிய சரீரமுள்ளவளே, இந்திரன் முதலான தேவ சிரேஷ்டர்களாலும் போற்றத்தக்கவளே, ஹே சாரதே! ஜாட்யம் என்னும் கடலில் மூழ்கியுள்ள புத்தியை உடைய எனக்கு கைப்பிடி கொடு. என் புத்தியில் அக்ஞானம் சூழ்ந்திருப்பதால் ஆத்மதத்வத்தை அறிய முடியவில்லை. அதனால் ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கித் தத்தளிக்கிறேன். நானாகக் கரை ஏற முடியாது. நீதான் ஞானத்தைக்கொடுத்து அக்ஞானத்தைப்போக்கி கை தூக்கிவிடவேண்டும்.

— ஸ்ரீவாணி பாண்யவலம்பஸ்துதி.



## ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு உபதேசம்

( பெருங்குளம் )

பரப்ரம்மத்தை அகண்ட ஸத் சித் ஆனந்தரூபம் என்று வர்ணிக்கிறார்கள். பரப்ரம்மம் ஒன்றே உளது. அது எங்கும் வியாபித்திருக்கின்றது. எப்பொழுதும் உள்ளது. எல்லையற்ற ஆனந்தமயமானது. அவ்வானந்தத்தை அனுபவிக்கும் விதம்அனந்தம். அதாவது ஸந்தோஷத்தை அநேக விதங்களாக அநுபவிக்கமுடியும்.

ஆனந்தம் அல்லது ஸந்தோஷம் என்பது என்ன? அது மனத்தின் ஒரு பாவனநிலையே. இப்பாவனு (**भावना**) நிலை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாக இருக்கிறது. மனத்துக்கு மனம் வித்தியாசப்படுகின்றது. அதுபோல் காலத்துக்குக் காலமும் மாறுதலடைகின்றது. ஒரு சமயம் மனத்தில் ஆனந்தப் பெருக்காக ஊற்றெடுக்கும் பாவனை சிலகாலத்துக்குப்பின் அவ்விதமிருப்பதில்லை. ஒரு மனிதன் ஸந்தோஷமாக இருக்கிறான் என்று எதனால் கூறுகிறோம்? ஒருவனுடைய முகபாவத்திலிருந்தும் வேறு செய்கைகளிலிருந்தும் அவன் ஆனந்தமாக இருக்கிறான் என்று ஊகிக்கிறோம். இவ்வானந்தம் ஒருவனுடைய பாவனையினாலும், அநுபவத்தினாலுமே உணரக்கூடியது.

இப்பாவனையுடன் ஒட்டி எழும் மற்றொரு கருத்து ஒருவனுடைய வாழ்க்கையின் அநுபவங்கள் ஆகும். மரணத்துக்குப்பின் வாழ்க்கை உண்டா? அல்லது இறந்த உடன் ஆத்மா விடுதலை அடைந்துவிடுகிறதா? இவைகளைப்போன்ற ஸூக்ஷ்ம அன்வேஷணத்துக்குரிய தர்க்கரீதியான கேள்விகளுக்கு விடை நாசிகேத உபாக்யானத்தில் தெளிவாகக்காணலாம். கடோபநிஷத்தில் நசிகேதஸ் யமதர்மராஜனிடம் பின் வருமாறு கேள்விகள் கேட்கிறான். "மரணத்துக்குப் பின் வாழ்க்கை உண்டா? அமரத்தன்மையென்பது என்ன?"

**येयं प्रेते विचिकित्सा मनुष्ये**
**अस्तीत्येके नायमस्तीति चैके ।**

( யேயம் ப்ரேதே விசிகித்ஸா மனுஷ்யே
அஸ்தீத்யேகே நாயமஸ்தீதி சைகே )

— கடோபநிஷத் 1–20

பிறப்பு இறப்பைப் பற்றிய இந்த நுணுக்கமான புதிர் தற்காலத்திய சிறந்த அறிவாளிகளுக்கும் புரியாத மர்மமாக இருக்கின்றது. வாழ்க்கை ஸம்பந்தமான இம் முக்ய விஷயம் பல மெய்ஞானிகளுக்கும், மந்திர த்ரஷ்டாக்களான ரிஷிகளுக்கும் பெரிய சிக்கலான பிரச்னையே. ஒவ்வொருவரும் முரண்பாடான அபிப்ருயங்களைத் தெரிவிக்கிருர்கள் ஆதலால் ஸந்தேகாஸ்பதமான இவ்வித தர்க்கரீதியான விஷயங்களுக்கு பிரமாணம் சாஸ்திரங்களே ஆகும்.

"तस्मात् शास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ"

( தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ )

— கீதை, 16–24

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மனிதன் எப்பொழுதும் சாஸ்திரத்தில் கூறியுள்ளபடி நல்ல காரியங்களையே செய்யவேண்டும். அதனுல் அவைகள் நல்ல பலன்களைக் கொடுக்கும். ஆனுல் இவ்வுலகில் நாம் காண்பது என்ன? எப்பொழுதும் தீய வழியில் செல்லுபவன் உலகில் மதிப்பான நல்ல நிலையில் இருக்கிருன். நற்காரியங்களைச் செய்கிறவன் இதற்கு நேர் மாருக இருக்கிருன். இதற்குக் காரணம் என்ன? தற்காலத்திய ஸந்ததியார்கள் மேற்கூறிய அடிப்படைக் கொள்கைகளையே தவறு என்று நினைக்கிருர்கள். ஆனுல் இவர்களுடைய கூற்று வெறும் பிரமையே. வேருெரு சாரார் விதியே மனிதனது செயல்களுக்குக் காரணம் என்கிருர்கள். இது உண்மையானுல் ஒருவன் எதற்காகக் கெட்டவனுகவோ, நல்லவனுகவோ இருக்கவேண்டும். நன்மை செய்யின் நன்மையே விளையும் என்பது என்னவோ உண்மையே. ஆனுல் நற்செய்கையின் பயன் தீமையில் முடியுமானுல் இது விதியின் பயன் என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. ஆனுல் நற்செய்கைகளினுல் விதியையும் வெல்லலாம் என்பது மிக மிக உண்மை. புருஷ பிரயத்தனம் சில சமயங்களில் விதியையும் வென்றுவிடுகிறது. இதற்கு அநேக உதாரணங்கள் இருக்கின்றன. புருஷப்ரயத்தனமும் விதியும் இடும் போட்டியில் எது பலமுள்ளதாக இருக்குமோ அதுவே வெல்லும்.

---



## ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு உபதேசம்
( பெருங்குளம் )

பரப்ரம்மத்தை அகண்ட ஸத் சித் ஆனந்தரூபம் என்று வர்ணிக்கிறார்கள். பரப்ரம்மம் ஒன்றே உளது. அது எங்கும் வியாபித்திருக்கின்றது. எப்பொழுதும் உள்ளது. எல்லையற்ற ஆனந்தமயமானது. அவ்வானந்தத்தை அனுபவிக்கும் விதம்அனந்தம். அதாவது ஸந்தோஷத்தை அநேக விதங்களாக அநுபவிக்கமுடியும்.

ஆனந்தம் அல்லது ஸந்தோஷம் என்பது என்ன? அது மனத்தின் ஒரு பாவனநிலையே. இப்பாவன (भावना) நிலை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாக இருக்கிறது. மனத்துக்கு மனம் வித்தியாசப்படுகின்றது. அதுபோல் காலத்துக்குக் காலமும் மாறுதலடைகின்றது. ஒரு சமயம் மனத்தில் ஆனந்தப் பெருக்காக ஊற்றெடுக்கும் பாவனை சிலகாலத்துக்குப்பின் அவ்விதமிருப்பதில்லை. ஒரு மனிதன் ஸந்தோஷமாக இருக்கிறான் என்று எதனால் கூறுகிறோம்? ஒருவனுடைய முகபாவத்திலிருந்தும் வேறு செய்கைகளிலிருந்தும் அவன் ஆனந்தமாக இருக்கிறான் என்று ஊகிக்கிறோம். இவ்வானந்தம் ஒருவனுடைய பாவனையினாலும், அநுபவத்தினாலுமே உணரக்கூடியது.

இப்பாவனையுடன் ஒட்டி எழும் மற்றொரு கருத்து ஒருவனுடைய வாழ்க்கையின் அநுபவங்கள் ஆகும். மரணத்துக்குப்பின் வாழ்க்கை உண்டா? அல்லது இறந்த உடன் ஆத்மா விடுதலை அடைந்து விடுகிறதா? இவைகளைப்போன்ற ஸூக்ஷ்ம அன்வேஷணத்துக்குரிய தர்க்கரீதியான கேள்விகளுக்கு விடை நாசிகேத உபாக்யானத்தில் தெளிவாகக்காணலாம். கடோபநிஷத்தில் நசிகேதஸ் யமதர்மராஜனிடம் பின் வருமாறு கேள்விகள் கேட்கிறான். "மரணத்துக்குப் பின் வாழ்க்கை உண்டா? அமரத்தன்மையென்பது என்ன?"

येयं प्रेते विचिकित्सा मनुष्ये
अस्तीत्येके नायमस्तीति चैके ।

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு உபதேசம்

( யேயம் ப்ரேதே விசிகித்ஸா மனுஷ்யே
அஸ்தீத்யேகே நாயமஸ்தீதி சைகே )

— கடோபநிஷத் 1-20

பிறப்பு இறப்பைப் பற்றிய இந்த நுணுக்கமான புதிர் தற்காலத்திய சிறந்த அறிவாளிகளுக்கும் புரியாத மர்மமாக இருக்கின்றது. வாழ்க்கை ஸம்பந்தமான இம் முக்ய விஷயம் பல மெய்ஞ்ஞானிகளுக்கும், மந்திர த்ரஷ்டாக்களான ரிஷிகளுக்கும் பெரிய சிக்கலான பிரச்னையே. ஒவ்வொருவரும் முரண்பாடான அபிப்ராயங்களைத் தெரிவிக்கிறார்கள் ஆதலால் ஸந்தேகாஸ்பதமான இவ்வித தர்க்கரீதியான விஷயங்களுக்கு பிரமாணம் சாஸ்திரங்களே ஆகும்.

" तस्मात् शास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ "

( தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ )

— கீதை, 16–24

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மனிதன் எப்பொழுதும் சாஸ்திரத்தில் கூறியுள்ளபடி நல்ல காரியங்களையே செய்யவேண்டும். அதனால் அவைகள் நல்ல பலன்களைக் கொடுக்கும். ஆனால் இவ்வுலகில் நாம் காண்பது என்ன? எப்பொழுதும் தீய வழியில் செல்லுபவன் உலகில் மதிப்பான நல்ல நிலையில் இருக்கிறான். நற்காரியங்களைச் செய்கிறவன் இதற்கு நேர் மாறாக இருக்கிறான். இதற்குக் காரணம் என்ன? தற்காலத்திய ஸந்ததியார்கள் மேற்கூறிய அடிப்படைக் கொள்கைகளையே தவறு என்று நினைக்கிறார்கள். ஆனால் இவர்களுடைய கூற்று வெறும் பிரமையே. வேறொரு சாரார் விதியே மனிதனது செயல்களுக்குக் காரணம் என்கிறார்கள். இது உண்மையானால் ஒருவன் ஏதற்காகக் கெட்டவனாகவோ, நல்லவனாகவோ இருக்கவேண்டும். நன்மை செய்யின் நன்மையே விளையும் என்பது என்னவோ உண்மையே. ஆனால் நற்செய்கையின் பயன் தீமையில் முடியுமானால் இது விதியின் பயன் என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. ஆனால் நற்செய்கைகளினால் விதியையும் வெல்லலாம் என்பது மிக மிக உண்மை. புருஷப்பிரயத்தனம் சில சமயங்களில் விதியையும் வென்றுவிடுகிறது. இதற்கு அநேக உதாரணங்கள் இருக்கின்றன. புருஷப்ரயத்தனமும் விதியும் இடும் போட்டியில் எது பலமுள்ளதாக இருக்குமோ அதுவே வெல்லும்.

S. K. viii-1-1

ஸ்ரீ சங்கர க்ருபா

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ श्रीशंकरकृपा ॥

( वेमूरी श्रीसीतारामशास्त्री )

महत्यस्मिन् विस्तीर्णे बहुविधजनाकीर्णे प्रपञ्चे सर्वेष्वपि प्रान्तेषु अद्य दारिद्र्यभयसंक्षोभाद्या अनर्थाः प्रचण्डताण्डवं कुर्वन्ति। न कुत्रापि शान्ति-सौख्ये उपलभ्येते। सर्वस्यास्यानर्थस्य धर्मह्रासोऽधर्मविजृम्भणं च परमं निदानमिति आस्तिकमहाशयानां अचञ्चलो विश्वासः निर्णयश्च। ततः अधर्मनिर्मूलनाय धर्मोद्धरणाय च बहवो महनीया बहुषु प्रान्तेषु बहूनुद्यमानुपक्रमन्ते। तेषामन्यतमस्य चिह्नमेवेयं श्रीशंकरकृपा ॥

सर्वपुरुषार्थदात्री श्रीमच्छंकरकृपा प्रपाऽऽर्तानाम्।
नीरूपाऽनालापाऽप्याक्षररूपैधतां सुधालापा ॥

श्रीमच्छंकरकृपा एधतां—सर्वोत्कर्षेण वर्धताम्।

श्रीमतः शंकरस्य कृपा श्रीशंकरकृपा। श्रीमतः—अणिमाद्यष्टैश्वर्य-संपन्नस्य, शंकरस्य—सकलप्राणिशिवंकरस्य कैलासवासिनो गौरीपतेः परम-शिवस्य, कृपा—करुणा ॥

यद्वा श्रीमतः-यमनियमाद्यष्टाङ्गयोगसंपन्नस्य नित्यानित्यवस्तुविवेकादि-ब्रह्मविद्यासाधनचतुष्टयसंपन्नस्य तत्साध्यज्ञानश्रिया तत्फलभूतजीवन्मुक्तिश्रिया च समेतस्य, शंकरस्य—श्रीशंकरभगवत्पादाचार्यस्य श्रीशृङ्गगिरिशारदापीठादि-स्थापकस्य आदिजगद्गुरोः साक्षात् शिवावतारभूतस्य, कृपा ॥

अथवा श्रीमती शंकरी च कृपा श्रीशंकरकृपा। प्रशस्तसर्वार्थ-संपत्समृद्धा, आश्रिताः यां यां अर्थश्रियं यद्यत् सुखं च अभिलषन्ति तत्सर्व-मपि दातुं समर्था इति भावः ॥

ननु प्रतिजनपदं प्रतिनगरं च कतिचन श्रीमन्तो दृश्यन्ते। संपन्नेभ्योऽपि वितरणशीलरहितेभ्यः तेभ्यः श्रितानां दीनानां च न यथार्हं प्रयोजनं उपलभ्यते। ततः वितरणशीलशून्यं श्रीमत्त्वमात्रं अनुपयुक्तमेवेति शङ्कानुत्पत्तये **सर्वपुरुषार्थदात्री** इत्युच्यते॥

सर्वपुरुषार्थदात्री—सर्वेषां पुरुषार्थानां दात्री धर्मार्थकाममोक्षाख्य-पुरुषार्थचतुष्टयवितरणशीला इत्यर्थः। यद्वा सर्वपुरुष-अर्थ-दात्री सर्वेभ्यः पुरुषेभ्यः अर्थदात्री। साधुरयं अयमसाधुः, अर्होऽयं अयमनर्ह इति विमर्शमन्तरेणैव, साधुतां अर्हतां चाकलय्य वा आश्रितेभ्यः सर्वेभ्योऽपि पुरुषेभ्यः निर्विशेषं पुरुषार्थप्रदायिनी इति भावः॥

ननु लङ्घनेषु क्रियमाणेषु मृष्टान्नलाभ इव आध्यात्मिकादिषु बहुषु अनर्थेषु अनुभूयमानेषु सत्सु पुरुषार्थलाभोऽपि अकिञ्चित्कर एव भवति। ततः केवलपुरुषार्थदात्र्या श्रीशंकरकृपया किं अस्माकं इत्याशयानुदयाय **प्रपा आर्तानां** इत्यभिधीयते। प्रपा पानीयशाला आर्तानां आतपपिपासादि-पीडितानां यथा मधुरं शीतलं च पानीयं प्रदाय आतपादिबाधाः अपनीय आनन्दं जनयति, तथा इयं श्रीशंकरकृपा च आर्तानां भवरोगादिबाधितानां आध्यात्मिक-आधिदैविक-आधिभौतिकरूपं तापत्रयं अपाकृत्य मधु एव अत्यन्तं आनन्दं जनयति इत्यर्थः॥

ननु यदि इयं शंकरकृपा उक्तरीत्या सर्वानर्थनिवृत्तिकरी सर्वपुरुषार्थदात्री च भवति, तर्हि अस्या नामरूपे नेत्रयोरपि प्रत्यक्षीभवेतां, प्रभूतैः स्वर्णाक्षरैश्च लिख्येतां; न तथा कुत्रापि गोचरीभवतः। किं एतत् इति संशयापनोदनाय नामरूपाभाव एव अस्याः सर्वातिशायी अलङ्कारः इति विशदीकर्तुं तं अङ्गीकरोति—**नीरूपा अनालापा** इति॥

नीरूपा निर्गतं रूपं यस्याः सा शुक्लनीलादिवर्णरहिता, दीर्घत्व-ह्रस्वत्वाद्याकारशून्या वा। न विद्यते आलापः उक्तिः यस्याः सा अनालापा।

अत्र आलापशब्दः नामपर्यायतया गृह्यते । तथा च लोके तावत् जातिगुणक्रियादिमतां देशतः कालतः वस्तुतश्च परिच्छिन्नानामेव पदार्थानां नामरूपे अवलोक्येते । इयं श्रीशंकरकृपा नामरूपरहिता इत्यनेन गुणगुणिनोः अभेदोपचारात् श्रीशंकरवत् अपरिच्छिन्ना अनन्तशक्तिसंपन्ना अनिर्वाच्या च इति व्यज्यते । अपिच, नामरूपयोः जगत्संबन्धित्वात् जगतश्च दृश्यत्वेन, यत् दृश्यं तत् नश्यं इति नियतिं अनुसृत्य, नश्यत्वदुःखकरत्वमिथ्यात्वादिदोषभूयिष्ठत्वात् नामरूपराहित्यं अस्याः जगद्वैलक्षण्यद्योतकं भवति । किञ्च, यत्र पुनः नामरूपाद्याडम्बरो दृश्यते तत्र वास्तविका परोपकारादिक्रियाकारिता मृग्या भवति । यत्र तु क्रियाकारिता तत्र नैव आडम्बरः इति प्रायशः सर्वेषामनुभवः । अतः इयं श्रीशंकरकृपा तादृशाडम्बररहिताऽपि बहुमुखं जगदुपकारिणी भवति इत्यत्र न कोऽपि संशयः । अनालापा इत्यत्र न विद्यन्ते आलापाः शब्दाः यस्याः महत्त्वप्रकटनाय स्तुतिकरणाय वा समर्थाः सा अनालापा, "यतो वाचो निवर्तन्ते" इत्यादिप्रमाणैः इयं ईदृशी इति अनिर्देश्या इति च अवगम्यते ॥

ननु नामरूपरहितत्वेन यदि इयं श्रीशंकरकृपा अनिर्देश्या भवति तर्हि नामरूपाद्यालम्बनवस्तुमात्रदर्शनपरिचितानां अस्माकं अनुपयुक्तैव इति न मन्तव्यम् । तादृशी श्रीशंकरकृपा अद्य अधुना भक्तजनानुग्रहाय अक्षररूपा अकारादिक्षकारान्तपञ्चाशद्वर्णात्मिका । यद्वा अक्षरं अनश्वरं रूपं यस्याः सा अक्षररूपा, स्थिरस्वरूपा श्रीशंकरकृपापत्रिकारूपेण जाता इति भावः । अथवा अक्षरं न क्षरतीति परं ब्रह्म, तत् रूपयति निरूपयति इति अक्षररूपा, करतलामलकवत् गुह्यातिगुह्यपरब्रह्मस्वरूपनिरूपणसमर्था इति भावः ॥

सा पत्रिका कीदृशी एधतां इति अभिलष्यते इत्याकाङ्क्षायां आह— सुधालापा इति । सुधावत् मधुराः आलापाः यस्याः सा सुधालापा । धर्मशास्त्रकल्पसोपमा । अमृतवत् मधुरातिमधुरोक्तिसहिता वर्धताम् ॥

ननु मधुरालापाः सर्वास्वपि पत्रिकासु सर्वेषु च काव्येषु दृश्यन्ते, "कारालापांश्च वर्जयेत्" इति शास्त्रेण आपातरमणीया आलापाः शिष्टजनाग्राह्याश्च भवन्ति। किञ्च, "हितं मनोहारि च दुर्लभं वचः" इत्यभियुक्तोक्त्या, यत् हितं वचः न तत् मनोहारि, यत् मनोहारि न तत् हितं, अतः हितं मनोहारि च वचः दुर्लभं इत्यवगम्यते। तस्मात् संगीतादिवत् श्रवणकालमात्रसुखावहमधुरालापवैशिष्ट्येन किं अस्याः श्रीशंकरकृपायाः वैशिष्ट्यं इति शङ्का जायेत। तत्परिहाराय सुधालापा इत्यस्य शब्दस्य सुधावत् जरामरणनिवर्तकाः आलापाः यस्याः सा इति विग्रहेण अन्योऽर्थोऽभिधीयते ॥

सुधायाः जरामरणनिवर्तकत्वं पुराणप्रसिद्धमेव, कथं आलापानां तत्, इति न शङ्कनीयम्। जन्मजरामरणादयः षड्विकाराः देहधर्माः स्वाभाविकाः अपरिहार्याश्च। वयं तावत् देहिनः, न देहाः। गेहिनो वयं यथा गेहेभ्यो विलक्षणाः, तथा देहिनो वयं देहेभ्योऽपि अत्यन्तं विलक्षणा एव। देहधर्माः जन्मजरामरणादयः देहिषु अस्मासु अध्यस्यन्ते, भ्रान्तिवशात् आरोप्यन्ते, यथार्थतस्तु न सन्ति। एवं क्षेत्रक्षेत्रज्ञौ पृथक्कृत्य प्रबुद्ध्य भ्रान्त्यापतितान् वस्तुतः शून्यांश्च जन्मजरामरणादीन् वारयेयुः श्रीशंकरकृपालापाः। ततो न केवलं मधुरमधुरालापविशिष्टैव, किंतु जरामरणनिवर्तकहितालापविशिष्टा च, इत्यतः विशिष्टमेव श्रीशंकरकृपायाः वैशिष्ट्यं जरामरणराहित्यात्मकदिव्यत्वापादकम्। सुधायाः तावत् जरामरणद्वयनिवर्तकत्वमेव, एतदालापानां तु जन्मादिषड्विकारनिवर्तकत्वं च अस्तीति ततोऽपि वैशिष्ट्यं व्यज्यते ॥

ननु "सुधामप्यास्वाद्य ... विपद्यन्ते ... दिविषदः" इति भावस्पष्टोक्तिः। देवा अपि असुरेभ्यः मुनिशापादिभ्यः उत्तममध्यमादितारतम्याच्च निरन्तरं बिभ्यति क्षुभ्यन्ति खिद्यन्ति विपद्यन्ते च इति पुराण-

कथनम् । एतेन जरामरणरहितानामपि भयसंक्षोभादयः अपरिहार्याः अनुस्यूताश्च भवन्तीति विशदीभवति । अतो जरामरणादिनिवर्तकालाप-विशिष्टयाऽपि किं अनया श्रीशंकरकृपया इति शङ्का तदवस्थैवेति न मन्तव्यम् । सुधालापा इत्यस्य सुधातिरिक्ताः आलापाः यस्याः सा सुधालापा इति मध्यमपदलोपिविग्रहेण अपरोऽर्थः अनुसंधीयते । आलापानां सुधाति-रिक्तत्वं च नित्यनिरतिशयदुःखलेशासंभिन्नपरिपूर्णाद्वयब्रह्मानन्दस्थितिरूप-मुक्तिफलदायित्वम् । एतेन उक्ता अप्रयोजकत्वशङ्का निरस्ता स्यात् । अत्र तावत् व्यतिरेकालंकारः "उपमानाद्यदन्यस्य व्यतिरेकः स एव हि" इति लक्षणात् ॥

लोकेऽस्मिन् सर्वैरपि प्राणिभिः द्वैतबुद्धौ सत्यामेव नानाविधाः भयसंक्षोभाद्यनर्थाः अनुभूयन्ते । द्वैतबुद्धिर्नाम भेदभावः सः एषः त्वं अहं स्वीयः परकीयः तत् इदं इत्येवमादिः । प्रातिभासिकव्यावहारिकदशयोः स्वप्नजाग्रतोः इयं द्वैतबुद्धिः अनपोह्या, तन्निबन्धनाः भयसंक्षोभाद्यनर्थाश्च अपरिहार्याः । "ब्रह्मात्मना संस्थितिः" इति प्रतिपाद्यमानायां निर्विकल्पक-समाध्याख्यतुरीयदशायां तु द्वैतबुद्धिः तत्कृताः भयसंक्षोभादयोऽपि नानुभूयन्ते । इयमेव अस्माकं सर्वेषां लक्ष्यभूता कथमपि संपाद्या । अनयैव मानुष-जन्मनोऽस्य महिष्ठता सफलता च ॥

ननु किं ईदृशी समाधिदशा वन्ध्यापुत्रवत् शशशृङ्गवच्च नाममात्र-प्रसिद्धा प्ररोचनार्थं वर्णिता च, उत वास्तविकी अप्यास्ति च? सत्त्वे चास्याः प्रमाणं किम्? इति शङ्का न कार्या । "एकमेवाद्वितीयं ब्रह्म" "सर्वं खल्विदं ब्रह्म," "नेह नानाऽस्ति किंचन," "तत् त्वमसि" इत्यादयः उपनिषदुक्तयः परिपूर्णाद्वयब्रह्मात्मैक्यस्थितिं सर्वविद्वत्परमलक्ष्यभूतां बोधयन्ति । सर्वानुभवसिद्धा सुषुप्तिरपि स्वयं द्वैतभावेन तत्कृतैः भयसंक्षोभादिभिश्च रहिता आनन्दानुभवात्मिका च सती निर्विकल्पकसमाध्यपरपर्यायस्वस्वरूपानन्दानु-

भवद्दशायाः सत्त्वं आत्मदृष्टान्तेन व्यञ्जयति, तद्विषयिकां अस्मदीयां असंभावनां च व्यपोहति । ब्रह्मज्ञाः ब्रह्मनिष्ठाः तदनुभवोक्तयश्च प्रबलं प्रमाणम् इत्यतः सा दशा वास्तविकी आप्या च ॥

ननु तर्हि सुषुप्त्या एव कुतः कृतकृत्यता न स्यात् यतः तस्यां च सकलदुःखध्वंसः निरतिशयानन्दानुभवश्च उपलभ्येते इति च न मन्तव्यम् । सुषुप्तौ सकलदुःखध्वंसस्य आनन्दानुभवस्य च सत्त्वेऽपि, सर्वानर्थबीजभूता सवासना अनाद्यविद्या अस्मान् न जहाति । तदा लीना सती सा पश्चात् अनुवर्ततैव । "न किञ्चित् अवेदिषं" इति सुषुप्तोत्थितस्य पुरुषस्य स्मरणमेव अस्मिन्नर्थे प्रमाणम् । ततो न सुषुप्त्या कृतकृत्यता । निर्विकल्पकसमाधिदशायां तु सवासना मूलाविद्या सकार्यं निःशेषं नश्यति । अतः सैवास्माकं लक्ष्यभूता कृतकृत्यतापादिका च ॥

सुषुप्तोत्थितः पुरुषः प्रारब्धकर्मानुगुणं यथा यथापूर्वं संसरति, तथा समाधिव्युत्थितोऽपि ज्ञानी वासनावशात् भिक्षाटनादिषु सर्वेषु व्यवहारेषु यथापूर्वं सक्तोऽवलोक्यते । कथं अतः समाधिदशयाऽपि कृतकृत्यता इति न मन्तव्यम् । ज्ञानिनः ज्ञानोत्पत्तिसमकाल एव मूलाविद्या सवासना नश्यति देहपातपर्यन्तं दग्धपटवत् भर्जितबीजवच्च वासना आभासरूपेणैव ज्ञानिनं अनुवर्तेरन्, अतो न पुनः संसारापादिका भवन्ति । किञ्च, स यथावत् व्यवहरन्नपि गुणा गुणेषु वर्तन्ते इति मत्वा न सज्जते, न करोति लिप्यते च । तथा प्रारब्धक्षयपर्यन्तं जीवन्मुक्तः स्थित्वा देहपातानन्तरं विदेहमुक्तो भवति ॥

अन्यच्च, "यत्र त्वस्य सर्वं आत्मैवाभूत् तत् केन कं पश्येत्" इति श्रुत्या अधिगतपूर्णब्रह्मात्मबोधस्य व्यवहार एव न संभवति । अन्येषां दृष्टावेव स व्यवहरन्निव प्रतीयते । "निमिषार्धं न तिष्ठन्ति वृत्तिं ब्रह्ममयीं विना । यथा तिष्ठन्ति ब्रह्माद्याः सनकाद्याः शुकादयः ॥" इति स्मृत्यनु-

सारेण स ज्ञानी सदा ब्रह्मात्मनैव तिष्ठति, नित्यसमाधिमान् समाधिदशायां व्युत्थानदशायां च अप्रच्युतस्वस्वरूप एव इति यावत्। अतः सुप्तोत्थितस्य समाधिव्युत्थितस्य च महदन्तरं वर्तते। तेन सुषुप्त्या न कृतकृत्यता, समाधिदशया तु कृतकृत्यता निर्विवादा ॥

एवं सर्वोपप्लवरहितनित्यनिरतिशयाद्वय ब्रह्मानन्दानुभवदशाप्रबोधकहितालापविशिष्टतया एतस्याः श्रीशंकरकृपाख्यायाः पत्रिकायाः अस्त्येव प्रशस्ततमं प्रयोजनं पाठकमहाशयानाम्। सैषा आचन्द्रतारार्कं सर्वोत्कर्षेण एधतां वर्धतां इतीदं मङ्गलाशासनम् ॥



द्वे एव लोके शुचिमप्रमत्तं
बलादकार्ये विनियोजयेते।
नीचावमानप्रभवो हि मन्युः
क्षुधावसन्नं च गृहे कळत्रम् ॥

மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களிலும் மிகப் பரிசுத்தனாக கவனக்குறைவு இல்லாதவனாக இருந்த போதிலும் அந்த மனிதனை வாழ்க்கையில் இரண்டு நிகழ்ச்சிகள் மட்டும் பலாத்காரமாக செய்யத்தகாத காரியத்தையும் செய்யும்படி தூண்டி விடுகின்றன. (1) அல்பன் செய்யும் அவமானத்தால் உண்டாகும் கோபம். (2) வீட்டில் பசியால் துன்புறும் மனைவி (குடும்பம்) ஆகவே இதற்கு இடம் கொடாமல் மிக்க கவனத்துடனிருக்க வேண்டும்.

—மஹாபாரதம்

# அடியார் அருள் வாக்கு

ஸந்த் துகாராம் அபங்கம் (மராட்டி)

आनन्दा चा कंद हरि हा देवकी नन्दन पाहिला (आनन्दा)

भक्तासाठीं ठेउन कर कटीं भीमानिकटीं राहिला (आनन्दा)

कंस भयाने वसुदेव ने नन्द-यशोदा वाहिला (आनन्दा)

यज्ञ याग जप-तपा सी नभुळे, ध्यान धारणे नाकळे ।
निश्चय साचा परि तुकयाचा भक्ति गुणासी मोहिला ॥ (आनन्दा)

ஆனந்தவடிவாம் ஸ்ரீ ஹரியே தான் தேவகி மைந்தனெனக் கண்டேன்

பக்தரைக் காக்கவே பீமாநதிக்கரையில் பதுமகரம் இடைமேல்
ஊன்றி நிற்கும் விட்டல் (ஆனந்த)

கம்ஸனுக் கஞ்சியே கண்ணனை வஸுதேவன் நந்த
யசோதையிடம் சேர்த்தானே (ஆனந்த)

யாக யோக ஜப தவத்தால் மயங்கானே, த்யானத்தால்
அறிவதும் எளிதிலையே

நிச்சயமா யறிந்தேன் துகாராம் இன்றே பக்தி பரவசத்தால்
அருள்வானே விட்டல் (ஆனந்த)

**விளக்க உரை :—**

ஆனந்தமே உருவான, ஸதானந்த ஸ்வரூபியான ஹரியாகிய ஸ்ரீமந் நாராயணனே, தேவகி மைந்தனாக, கண்ணனாக அவதரித்துள்ளான் எனக் கண்டுகொண்டேன். முழுப் பொலிவோடு நன்று அலர்ந்த செந்தாமரை மலரென ஹரியைக் கருதுவோமாயின் அந்தத் தாமரை மொக்குத்தான் கண்ணன் எனக் கொள்ளலாம்.

தன்மீது அத்யந்த பக்தி கொண்டுள்ள பக்தர்களைக் காக்கக் கண்ணன் விட்டல உருவத்துடன், பீமாநதியெனும் சந்திரபாகா நதிக்கரையில் தனது இடுப்பின்மேல் இருகரங்களையும் ஊன்றிப் பிடித்துக்கொண்டு காத்து நிற்கிறான். எங்கெங்கிருந்து எந்தெந்த பக்தர்கள் எந்தெந்த வேளையில் தன்னை அழைக்கிறார்களோ, அவர்களுக்கு அந்தக்கணமே அருள் செய்ய விரைந்தோடி வர எண்ணிக் காத்திருக்கிறான் நின்ற நிலையிலே.

கம்ஸனுக்குப் பயந்து வஸுதேவன் (ப்ரம்ன் இச்சைப்படியே) நந்தகோபன் யசோதையிடம் கண்ணனை வளரும்படி விட்டு விட்டு வருகிறான். எப்படி என்பதை கவனிப்போம். தேவகிக்கு எட்டாவது குழந்தையாகக் கண்ணன் அவதரித்ததும், பொழுது விடிந்தால் கம்ஸன் வந்து குழந்தையை வாங்கிப்போய் கொன்றுவிடுவானே என் வஸுதேவன் பயத்தால் நடுங்கவே குழந்தையாயிருந்த பகவான் நான்கு திருக்கரங்களுடனும் தலையில் பொற்கிரீடமும், வக்ஷஸ்தலத்தில் (மார்பில்) கௌஸ்துபமணியும் தரித்து, இடையில் பீதாம்பரம் (பொன்னுடை) உடுத்தி, சங்கு, சக்கரம், கதை, பதுமம் இவைகளை நான்கு கரங்களிலும் ஏந்தி, அநேகவிதமான திவ்யாபரணங்களும் பூண்டு, மஹா விஷ்ணுவாகக் காக்ஷியளித்து தானே இரு கரங்களுடன் சாதாரண மகவாகப் பிறந்திருப்பதை ஞாபக மூட்டித் தன்னை உடனே கோகுலத்தில் யசோதையிடம் கொண்டு விட்டு விட்டு அங்கு அவளுக்குப் பிறந்திருக்கும் பெண் குழந்தையை ஒருவருமறியாமல் இங்கு எடுத்து வரும்படிப் பணித்தான். யாவும் அநுகூலமாக அமையும் தடைகள் விலகும் என்றும் ஆசி தந்தான். முன்போல் குழந்தையாகிவிட்டான். வஸுதேவன் தேவ வாக்குப்படியே நடக்கலானான். அவன் கைகளில் மாட்டப் பட்டிருந்த விலங்குகள் தானாகக் கழன்று கொண்டன. பூட்டுகள் திறந்துகொண்டன. கதவுகள் திறந்து வழிவிட்டன. குழந்தையாகிய கண்ணனை ஒரு கூடைமேல் வைத்துத் தலைமேற் சுமந்து வெளிப்போந்தான் வசுதேவன். பின்புறமாகக் கதவுகள் மூடிக்கொண்டு பூட்டுகளும் பூட்டிக்கொண்டன. வெளியே காவலாளிகள் நல்ல உறக்கத்தில் இருந்தனர். கடுமையான மழை இடி, மின்னலோடு பெய்து கொண்டிருந்தது. எங்கும் இருள் கவ்விக்கொண்டது. பகவானின் சயனமான ஆதிசேஷன் தன் படங்களை விரித்துக் குடைபோல் கூடையின்மேலே கவிழ்ந்து வழிகாட்ட வெளிச்சமுங் கொடுத்துக்கொண்டு பின் தொடர்ந்தான். ஒரு சொட்டு மழைத் துளிகூட குழந்தைமேலோ, வசுதேவன் மீதோ விழவில்லை இங்ஙனம் சென்றுகொண்டிருக்கையில் இடையே யமுனா நதி குறுக்கிடுகிறது. மழையினால் யமுனையில் பெரும் பிரவாகம் இரு கரைகளையும் தொட்டு தண்ணீர் பெருகி ஓடுகிறது. வசுதேவன் கவலையின்றி முன்னேறுகிறான். நதி ஜலத்தில் அவன் பாதங்கள் பட்டதும், யமுனை இரு கூறாகப் பிரிந்து நின்று வழி விடுகிறது. நதியைத் தாண்டி அக்கரை சேர்ந்து கோகுலத்தில் நந்தகோபன் அரண்மனையில் யசோதை உறங்கும் அறையிற் சென்று கண்ணனை அவன் பக்கத்தே கிடத்திவிட்டு, அங்கிருந்த பெண் சிசுவை எடுத்து வெளிவந்தான்

வசுதேவன். மதுரை நோக்கி நடக்கலானான். யமுனை முன்போல் வழிவிட்டது. காவலர்கள் அப்படியே உறக்கத்திலிருந்தனர். சிறைக் கதவுகள் திறந்து வழிவிட்டுப் பின் மூடிப் பூட்டிக்கொண்டன. வசுதேவன் பெண் மகவை தேவகியிடம் கொடுத்தான். அவன் கைகளில் விலங்குகள் மாட்டிக்கொண்டன. இவ்வளவு விஷயமும் வேறு ஒருவரும் அறிந்திலர். கண்ணன் கோகுலத்தில் வளர்கின்றான்..

யக்ஞங்களென்ன யாகாதிகளென்ன இவைகளை முறைப்படி செய்வதாலோ, ஜபதபாதிகள் செய்து வேறு வகையான மந்திர ஸித்திகள் பெறுவதாலோ பரமன் அவைகளால் மயங்கி விடுவதில்லை அவன் தன் வசம் இழப்பதில்லை, ஏமாறுவதில்லை. இன்னும் வேதாந்த விஷயங்களில் இறங்கி சர்ச்சைகளில் நாம் ஈடுபடுவதாயினும் அவ்வித ஞான மார்க்கங்களினால் அவனைக் காண்பதும் அருள் பெறுவதும் அவ்வளவு சுலபமில்லை. ஒரு வேளை அம் முயற்சிகள் பயனில்லாமல் ஏற்படவும் இடமிருக்கிறது.

ஆனால் துகாராம் ஆகிய இவ் எளியோன் எனது அனுபவத்தில் தெரிந்த உண்மையை நிச்சயமாகச் சொல்கிறேன் அது யாதெனில் " ஆண்டவன், கண்ணன், விட்டலன் தன் மீது அசஞ்சலமாய் பக்தி செய்யக்கூடிய அடியார்களிடம், அவர்களின் அந்த உண்மை பக்திக்கு மெச்சிக் கட்டுப்படுவான். கட்டுப்பட்டு அவர்களுக்கு வேண்டியதெல்லாம் அருள்வான்." ஆதலின் பக்தி மார்க்கமே உயர்ந்தது. அதுவும் கலியுகத்தில் உடனே பலன் தரக் கூடியது.

பகவான் கீதையிலே :—

**अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते।**
**तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥**

அ. 9—சு. 22

"என்னையன்றி வேறில்லை என்று எந்த பக்தன் என்னையே முழுதும் நம்பி அடைக்கலமாக, தஞ்சமென்று அடைகிறானோ, வேறு சிந்தனையின்றி என்னைப்போற்றி பக்தி செய்கின்றானோ அவனுடைய யோக க்ஷேமங்களை, வாழ்க்கையின் அன்றாடத் தேவையை பூர்த்தி செய்து கொடுத்துப் பரிபாலிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்." என்று மார்தாட்டிச் சொல்கிறான் கண்ணன். அந்தரங்க பக்தியின் பலன் இங்கு கவனத்திற்குரியது.

—ஹரிஹரராம்

அத்யாத்ம ராமாயணப் பூஞ்சோலை
செண்டு 1.

# ஜடரே சயனம்

(ஸ்ரீ S. V. ரங்கநாதன், ஹௌரா.)

**पुनरपि जननं पुनरपि मरणं पुनरपि जननीजठरे शयनम् ।**
**इह संसारे खलु दुस्तारे कृपयापारे पाहि मुरारे ॥**

*புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே சயனம் ।*
*இஹ ஸம்ஸாரே கலு துஸ்தாரே க்ருபயாபாரே பாஹி முராரே ॥*

இந்த ஸம்ஸாரத்தில் மறுபடியும் மறுபடியும் ஜன்மம் ஏற்படுகிறது. மறுபடியும் மறுபடியும் மரணம் ஏற்படுகிறது. மரணத்துடன் நின்றுவிடுவதில்லை. அந்த ஜீவன் மறுபடியும் மறுபடியும் தாயின் கர்ப்பவாசம் என்ற ஜடரசயனத்தைச் செய்துகொண்டே வருகிறது. இந்த அவலமான பிறப்பு இறப்பு என்ற துன்பம் நீங்கவேண்டும் என்று நாம் பகவானைப் பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும் என ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் கூறியிருக்கின்றார். அதே பகவத்பாதாள் இந்த மானிட ஜன்மம் கிடைப்பது துர்லபம் என்றும் கூறியிருக்கின்றார். "அரிதரிது மானிடராதல் அரிது" அரிதாகவும் துர்லபமாகவும் இருப்பதால் மானிடப்பிறவி விசேஷமுடையதாக ஆகிறது.

யாருக்கும் அவரவர் இயற்றிய காரியங்களில் ஒரு பெருமை ஏற்படுவது சகஜம். எழுத்தாளன் தனது கட்டுரையில் பெருமை கொள்கிறான். கலைஞன் தனது கலா பரிபூர்ணத்தில் பெருமை கொள்கிறான். அதேபோல ஸகல லோகத்தையும் ஸ்ருஷ்டி செய்த பகவானும் தனது ஸ்ருஷ்டியில் பெருமை கொள்கிறார்.

தனது அசிந்த்ய மாயா சக்தியினால் உலகைப் படைத்து, மரம், செடி, கொடிகள், ஊர்வன, பறப்பன என்ற ஜந்துக்களையும் ச்ருஷ்டி செய்துவிட்டுப் பெருமைகொண்டிருந்தபோது பகவானுக்கு ஒரு அதிருப்தி இருந்ததாம். இவைகள் எல்லாம் பிறர் தயவை நாடியல்லவா வாழ வேண்டியிருக்கின்றது. தன்னைத் தானே உயர்த்திக்கொண்டு முன்னேறக் கூடிய ஒரு பிராணியை ஏன் சிருஷ்டி செய்யக்கூடாது என்று பகவானுக்குத் தோன்றியிருக்கவேண்டும். எனவே தான் புத்தியைக் கொடுத்துத் தானாக அதை உபயோகித்து முன்னேறக்கூடியதான மானிட ஜன்மம் ஏற்படுத்தி பகவான்

ஸந்தோஷமடைந்தாராம். அதனால்தான் சங்கர பகவத் பாதாள் "जन्तूनां नरजन्म दुर्लभं" (ஜந்தூநாம் நரஜந்ம துர்லபம்) என்று கூறியுள்ளார்.

ஆண்டவன் அமைத்த அமோகமான ஸ்ருஷ்டி மானிட ஸ்ருஷ்டி. ஆனால் பகவான் பெருமைப்பட்டுக்கொண்ட தோஷம் காரணமாகவோ என்னவோ, இந்த உத்க்ருஷ்டமான ஸ்ருஷ்டி ஜீவன்தான் அதிக க்லேசங்களை அனுபவிக்கின்றது. அவர் கொடுத்த புத்தியை அவர் விரும்பாத வழியில் செலுத்துகிறது. மனித சரீரத்தில் ப்ரவேசிக்கும் ஜீவனின் உத்தேசம், இனி மறு பிறவியே இல்லாமல் மோக்ஷமடைவதாகும். க்லேசங்களில் எல்லாம் கொடுமையானது இந்த "ஜடர சயனம்" என்ற க்லேசம் தான். அந்த ஜடரசயன க்லேசத்தை, அத்யாத்ம ராமாயணம் மிகவும் அற்புதமாக விவரித்திருக்கின்றது.

கிஷ்கிந்தா காண்ட காக்ஷி அது. ஜடாயுவின் சகோதரர் சம்பாதி தனது ஆத்ம கதையைக் கூறுகின்றார். சூர்ய மண்டலத்தை எட்டிப் பிடித்துவிடவேண்டும் என்று போட்டி போட்டுக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பிய ஸோதரர்களில் ஜடாயு மிகத் துன்பப்பட அவனைக் காப்பாற்ற ஸம்பாதி தன் இரக்கையை விரிக்கவே அவ் விரக்கைகள் சூர்ய ரச்மியின் வேகம் தாங்காமல் பொசுங்கிவிடவே சம்பாதி விந்திய மலைச் சாரலில் மூர்ச்சித்து விழுந்துவிட்டார். மூன்று தினங்களுக்குப் பிறகு ப்ரக்ஞை வந்தது ஸம்பாதிக்கு. இரக்கைகள் நஷ்டம் அடைந்த சோகம் அதிகரித்தது. வருத்தப் பட்டவாறே மெதுவாகக் கண்களைத் திறந்து பார்த்தபோது எதிரில் ஒரு ரமணீயமான ஆச்ரமம் தென்பட்டது. சிரமத்துடன் மெதுவாக அந்த ஆச்ரமத்தை அடைந்தார். அந்த ஆச்ரமத்தில் சந்த்ரமா என்ற முனிவர் வசித்து வந்தார். அந்த சந்த்ரமாமுனிவர் சம்பாதியைப் பார்த்து "ஹே சம்பாதி! இது என்ன கோரம்? நீ மகா பலவானாயிற்றே? உனக்கு யார் இந்த சங்கடத்தை உண்டு பண்ணினார்? உனது இரக்கைகள் பஸ்மமாகப் போன காரணம் என்ன?" என்று கேட்கவும் சம்பாதி தனது கர்வத்தினால் நேர்ந்த விபத்து இது என்று கூறிவிட்டு, துக்கம் மேலிட்டவனாய் "ஹே முனிபுங்கவ! தேகத்தில் எனது இரக்கைகள் நஷ்டமடைந்தபிறகு நான் எவ்விதம் ஜீவிதம் நடத்தமுடியப் போகிறது?" என்று வருத்தத்துடன் கூறினார். சம்பாதியை சமாதானம் செய்யும் பொருட்டு அந்த சந்த்ரமா என்ற முனிவர், மானிட சரீரத்தில் புகும் ஜீவனின் சரித்திரத்தைக் கூறுகிறார். அந்த சரித்திரம் எவ்வளவு அற்புதமாக இருக்கிறது என்று பார்க்கலாம்.

"ஹே! சம்பாதி! நான் கூறும் விஷயங்களை நீ ஜாக்கிரதையாகக் கேட்டுவிட்டு உசிதம்போல் செய். சுகம், துக்கம் என்று கூறுகிறோமே இதற்கு எல்லாம் இந்த தேகம்தான் காரணமாகின்றது. இந்த தேகம் கர்மத்தினால் ஏற்படுகின்றது. ஜீவன் தேகத்தில் நான் என்ற அகம்பாவத்தை ஏற்றி எப்பொழுதும் கர்மத்தைச்செய்வதிலேயே ஈடு படுகிறது. அவித்யையால் ஏற்பட்ட அஹங்காரம் ஜடம். ஆனாலும் அக்னியின் சூடு ஏறிய இரும்புக்கட்டிபோல சைதன்யத்துடன் சேர்ந்த அஹங்காரத்தால் தேஹமும் சேதனம்போல தெரிகிறது. அஹங் காரத்திற்கு என்ன உத்தியோகம் தெரியுமா? தேகத்தில் நான் என்ற எண்ணத்தை ஏற்படுத்துவது. இந்த எண்ணத்தினால்தான் சுகம், துக்கம் ஜன்மம், மரணம் என்ற அநுபவங்கள் ஏற்படுகின்றன. உண்மையாக தேகத்தில் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மாவுக்கு இவைகள் எல்லாம் கிடையாது. இவைகள் மித்யை.

நான் பூஜை செய்கிறேன், நான் புண்யகர்மாக்களைச் செய் கிறேன், நான் யாகதானாதிகளைச் செய்கிறேன் என்று அஹங்கார புத்தியுடன் கர்மாக்களைச் செய்துகொண்டு, போக போக்யங்களை அனுபவித்துவிட்டு, முடிவில் புண்ய க்ஷயமடைந்து பிராரப்த வசமாக தனது எண்ணம் பூர்ணமடையாமல் மறுபடியும் ஜீவன் கீழே விழுந்து விடுகிறது. முதலில் ஜீவன் சந்திரமண்டலத்தில் விழுகிறது. பிறகு மறுபடியும் பூமியில் பலவித தான்யங்களில் விழுகிறது. பிறகு பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம் என்ற நான்கு ரூபமான அன்னத்தில் நுழைகின்றது. அந்த அன்னத்தைச் சாப்பிடும் புருஷனிடம் நுழைகிறது. அதன் பிறகு ஸ்த்ரீஸம்பந்தத் தால் கர்ப்பவாசம் அடைகிறது. ஜடரசயனம் ஆரம்பமாகிறது.

ஜடரத்தில் நுழைந்த ஜீவன் ஒரு ஆக்ருதியை யடைந்து நாளுக்குநாள் வ்ருத்தியாகிக்கொண்டு வருகிறது.

**दिनेनैकेन कललं भूत्वा रूढत्वमाप्नुयात् ॥**

**तत्पुनः पञ्चरात्रेण बुद्बुदाकारतामियात् ।**
**सप्तरात्रेण तदपि मांसपेशित्वमाप्नुयात् ॥**

**पक्षमात्रेण सा पेशी रुधिरेण परिप्लुता ।**
**तस्या एवांकुरोत्पत्तिः पञ्चविंशतिरात्रिषु ॥** **(कि का)**

திநேனைகேந கலலம் பூத்வா ரூடத்வமாப்நுயாத் ॥

த்த் புந: பஞ்சராத்ரேண புத்புதாகாரதாமியாத் ।
ஸப்தராத்ரேண ததபி மாம்ஸ பேசித்வ மாப்நுயாத் ॥

பக்ஷமாத்ரேண ஸா பேசீ ருதிரேண பரிப்லுதா ।
தஸ்யா ஏவாங்குரோத்பத்தி: பஞ்சவிம்சதி ராத்ரிஷு ॥

ஸ்த்ரீ ஸம்பந்தத்தால் கர்ப்பத்தில் நுழைந்த ஜீவன் ஒரு தினம் கடின பதார்த்த ரூபம் அடைந்து ஐந்து தினங்களில் புத்புத (நீர்க் கொப்பளாம்) உருவத்தை அடைகிறது ஏழு ராத்ரிகள் ஆனபிறகு மாம்ஸ ஸம்பந்தம் ஏற்படுத்திக்கொண்டு, பதினைந்து நாட்கள் ஆன பிறகு ரத்த ஸம்பந்தம் ஏற்படுத்திக்கொள்கிறது. இருபத்திஐந்து நாட்களுக்குப்பிறகு கிரமமாகக் கழுத்து, தலை, தோள், முதுகு, உதரம் முதலிய அங்கங்கள் தோன்றுகின்றன.

**ग्रीवा शिरश्च स्कन्धश्च पृष्ठवंशस्तथोदरम् ।**
**पञ्चधाङ्गानि चैकैकं जायन्ते मासतः क्रमात् ॥** (कि. का)

க்ரீவா சிரச்ச ஸ்கந்தச்ச ப்ருஷ்ட்டவம்சஸ்ததோதரம் ।
பஞ்சதாங்காநி சைகைகம் ஜாயந்தே மாஸத: க்ரமாத் ॥

பிறகு இரண்டு மாதங்களில் கைகள், பாதங்கள் முதலிய அவயவங்கள் ஏற்படுகின்றன. மூன்று மாதங்களில் ஸந்திகளும் நான்கு மாதங்களில் எல்லா விரல்களும் ஐந்தாவது மாஸத்தில் மூக்கு, காது, கண், பல், நகம், குஹ்யம் இவைகளும் உண்டாகின்றன. ஆறுவது மாதத்தில் ஸ்த்ரீ புருஷ வித்யாசம் தோன்றிவிடுகிறது. ஏழாவது மாதத்தில் ரோமங்கள் தோன்றுகின்றன. எட்டாவது மாதத்திலிருந்து அந்தந்த அங்கங்கள் பூர்ணமடைந்து விடுகின்றன.

**जठरे वर्धते गर्भः स्त्रिया एवं विहङ्गम ।**
**पञ्चमे मासि चैतन्यं जीवः प्राप्नोति सर्वशः ॥** (कि. का)

ஜடரே வர்த்ததே கர்ப: ஸ்த்ரியா ஏவம் விஹங்கம ।
பஞ்சமே மாஸி சைதன்யம் ஜீவ: ப்ராப்நோதி ஸர்வச: ॥

இனி ஸ்திரீ கர்ப்பம் வளர ஆரம்பிக்கின்றது. ஜீவனுக்கு ஐந்தாவது மாதத்தில் சேதன சக்தி, அறிவு தோன்றுகிறது. கர்ப்பத்தில் வளர்ந்து வரும் பிண்டம், நாபியில் ஏற்பட்ட சூக்ஷ்மமான வாயினுல், தாயாருடைய அன்ன ரஸத்தை க்ரஹித்துக்கொண்டு வளருகிறது.

சேதனு சக்தி என்ருல் அறிவு. அறிவு ஏற்பட்டு விட்டதால் தனது சூழ்நிலையாகிய கர்ப்பத்தைக் கண்டு நடுங்குகிறது. தாயின் ஜடரத்தில் இருக்கும் உஷ்ணம் தாங்காமல் தவிக்கின்றது. அறிவு ஏற்பட்டுவிட்டதல்லவா? எனவே நன்கு புரிந்துகொண்டுவிடுகிறது. தான் ஏன் இந்த ஜாடராக்கினி தாபம் அடையவேண்டி வந்தது என்ற அறிவு அதற்குக் கிடைத்துவிட்டதால் அதை எண்ணி வருந்துகிறது, எப்படி?

**स्मृत्वा सर्वाणि जन्मानि पूर्वकर्माणि सर्वशः ।**
**जठरानलतप्तोऽयम् इदं वचनमब्रवीत् ॥** **( कि. का )**

ஸ்ம்ருத்வா ஸர்வாணி ஜந்மாநி பூர்வகர்மாணி ஸர்வஶ: I
ஜடராநல தப்தோऽயம் இதம் வசநமப்ரவீத் II

அந்தப் பிண்டம் தனக்குள்ளேயே பேசிக்கொள்கிறது, "நான் பூர்வ ஜன்மங்களில் எல்லாம், சரியாகப் புண்ய கர்மாக்களைச் செய்யாமல் போனதால் அல்லவா, மறுபடியும் இந்த ஜடரத்தில் புகுந்து, ஜாடராக்கினியிஞல் தகிக்கப்பட்டு வருந்துகிறேன் பகவான் எனக்கு ஒரு ஜன்மமா கொடுத்தார்? எத்தனையோ ஜன்மங்கள் அனுக்ரஹம் செய்து, நான் இந்த ஜாடராக்கினி தாபம் இல்லாமல் செய்து கொள்ளும்படி சந்தர்ப்பங்கள் அளித்தாரே!"

**नानायोनिसहस्रेषु जायमानोऽनुभूतवान् ।**
**पुत्रदारादिसंबन्धं कोटिशः पशुबान्धवान् ॥**

**कुटुम्बभरणासक्त्या न्यायान्यायैर्धनार्जनम् ।**
**कृतं नाकरवं विष्णुचिन्तां स्वप्नेऽपि दुर्भगः ॥** **( कि. का )**

நாநாயோநி ஸஹஸ்ரேஷு ஜாயமாநோऽநுபூதவான் I
புத்ரதாராதி ஸம்பந்தம் கோடிஶ: பஶுபாந்தவான் II

குடும்ப பரணாஸக்த்யா ந்யாயாந்யாயைர் தநார்ஜநம் I
க்ருதம் நாகரவம் விஷ்ணுசிந்தாம் ஸ்வப்நேऽபி துர்பக: II

"எத்தெத்தனையோ பிறவி எடுத்தெடுத்தே இளைத்தேனே" என்று ஜடரத்தில் சயனம் செய்யும் பிண்டம் கதறுகின்றது. "ஆண்டவனே! நான் ஆயிரக்கணக்கான யோனிகளில் அல்லவா தோன்றினேன். எனக்கு என் ஜன்மங்களை எல்லாம் கணக்கெடுத்தால் அன்னை எத்தனை? அப்பன் எத்தனை? மனைவி, மக்கள், சுற்றம் எத்தனை? கோடிக்கணக்கான உறவு முறைகளை யல்லவா

பார்த்துவிட்டேன். பிறகு ஏன் எனக்கு இந்த ஜடரத்தில் வாசம் ஏற்படுகிறது?

ஆமாம்! நன்ருக ஞாபகம் வருகின்றது. நான் எனது பூர்வ ஜன்மங்களில் எல்லாம், எனது புத்தியை உபயோகிக்கத் தவறி விட்டேன். குடும்பத்தை நிர்வஹிக்கும் பொருட்டு, நியாய வழியிலும், அந்நியாய வழியிலும் செல்வம் ஈட்டுவதில் காலம் கழித்தேனே அல்லாமல், ஸ்வப்பனத்திலேனும், ஹே! பரந்தாமா! உன்னை எண்ண முயற்சித்தேஞ? எனவே எனக்கு இந்த ஜடரசயன தண்டனை வேண்டியதுதான்.

**इदानीं तत्फलं भुञ्जे गर्भदुःखं महत्तरम् ।**
**अशाश्वते शाश्वतवत् देहे तृष्णासमन्वितः ॥**

**[illegible]कार्याण्येव कृतवान्न कृतं हितमात्मनः ।**
**इत्येवं बहुधा दुःखं अनुभूय स्वकर्मतः ॥** (कि. का)

இதாநீம் தத்பலம் புஞ்ஜே கர்பதுக்கம் மஹத்தரம் 1
அஶாச்வதே ஶாச்வதவத் தேஹே த்ருஷ்ணுஸமந்வித: 11

அகார்யாண்யேவ க்ருதவான் ந க்ருதம் ஹிதமாத்மந: 1
இத்யேவம் பஹுதா துக்கம் அநுபூய ஸ்வகர்மத: 11

இந்தக்குற்றம் பிறர் செய்ததல்ல. நானே செய்த குற்றம். பல ஜன்மங்களை அடைந்து நான் பெற்ற ஞானம் யாது? சாச்வதமில்லாத ஒரு ஜன்மத்திற்கு ஒரு தாயாராகப் பல தாயார்களைப் பார்த்துவிட்டு, பல பந்து ஜனங்களைப் பார்த்துவிட்டு, பலவித போக போக்யங்களை அனுபவித்துவிட்டு, மறுபடியும் திரும்பத்திரும்ப ஏற்பட்ட ஜன்மங்களில் எல்லாம், என் மனைவி, என் மக்கள், என் வஸ்து, என் கார்யம் என்றுதானே சொல்லிக்கொண்டு அலைந்தேன்! சாச்வதமல்லாதவற்றை சாச்வதமாகக் கருதினேனே! செய்யக் கூடாத காரியங்களைச் செய்தேனே! எனக்கு இந்த ஜாடராக்கினி தாபம் நன்ருகவேண்டும். இந்த ஜடரசயனம் என்ற நரகம் அதனுல் தான் விடமாட்டேன் என்கிறது" என்று புலம்பிக்கொண்டே வளருகிறது அந்தப் பிண்டம். அதோடு நிற்கவில்லை. ஒரு உயர்ந்த ஒப்பற்ற தீர்மானத்தையும் செய்துகொள்கிறது. என்ன தீர்மானம் தெரியுமா? இந்த சமயத்திலாவது, கர்ப்பத்திலிருந்து விடுதலை கிடைத்து, பூமியில் ஜனனம் ஏற்பட்டவுடன், நல்ல புத்தியுடன்

இருக்கவேண்டும் என்று தீர்மானம் செய்துகொள்கிறது. பிறகு பத்து மாதங்கள் பூர்ணமானவுடன், கர்ப்பத்தை உதறிவிட்டு பூமியில் விழுகிறது. இதுதான் பிறப்பு, ஜனனம்.

பிறக்கும்போது ஏதோ ஒரு கிருமிபோலத் தோன்றி, பிறகு பால்யம், யௌவனம், வார்த்தக்யம் முதலிய அவஸ்தைகளை அடையும் போது, மறுபடியும் புத்தியுடன் பேசுகிறதா? அதுதான் கிடையாது. இந்த தேகமே நான், இந்த தேக சம்பந்தமுடைய இவள் என் மனைவி, இவர்கள் என்னுடைய மக்கள், இவை யாவும் என்னுடைய பொருள், என்று மறுபடியும் அந்த தேகத்தில் "நான்", "என்னுடையது" என்ற பாவங்களை ஏற்படுத்திக்கொண்டு இந்த சம்சாரத்தில் அந்த ஜீவன் அலைகின்றது.

எனவே தேகம் ஆத்மா அல்ல என்ற ஞானம் தோன்றும்வரை, நித்தியமல்லாதவற்றில் ஆசை குன்றுது. ஹே! சம்பாதி! நீ அதனால் துக்கப்படவேண்டிய காரணமில்லை. உனக்கு நான் இந்த ஞானோபதேசம் செய்திருக்கின்றேன். ஆத்மாவை சரீரத்திற்கு அப்பாற்பட்டதாக அறிந்துகொண்டு, நீ பகவத் பராயணனாக இருந்து கொண்டிரு." என்று அந்த ஜீவனின் சரித்திரத்தை மிகவும் அழகாகக் கூறி முடிக்கின்றார், சந்த்ரமா என்ற முனிபுங்கவர்.

நமக்கு இந்த தேகமே ஒரு குரு என்று தத்தாத்ரேயர் கூறுகின்றார். விவேகம் வைராக்கியம் என்ன என்பதைப் புரிந்துகொள்ள நமக்கு ஏற்பட்ட குரு நமது சரீரம். எனவேதான் மானிட சரீரம் பகவத் சிருஷ்டியில் விசேஷமாகக் கருதப்படுகின்றது. பல ஜன்மங்களை எடுத்தாலும், ஆத்ம அனாத்ம ஞானம் அந்த பரமாத்மாவின் அருளினால்தான் கிடைக்கமுடியும். இந்த ஜடாசயனம் என்ற க்லேசம் நீங்குவதற்கு அந்த பரமாத்மாவின் அருள் வேண்டும். எனவேதான் பகவத்பாதாள்,

**'कृपयापारे पाहि मुरारे'**

( க்ருபயாபாரே பாஹி முராரே )

என்று அந்தப் பரமாத்மாவை பஜனை செய்யுமாறு நம்மைக் கேட்டுக் கொள்கிறார்.

---

ஆங்கில கவி ராபர்ட் ப்ரௌனிங் காட்டும்

# ஈச்வர தத்வம்

( T. S. சிவராமலிங்கம் B. SC. )

ஈச்வர தத்வம் என்பது ஈச்வரனின் விகாஸம் (manifestation) இதைக் கடவுளின் ஸ்ருஷ்டியில் காண்கிறோம். இதனால் அவன் பெருமையையும் विभूति தன்மையையும் நன்கு அறிகிறோம். இந்தப் பாவத்தை (भाव) பிரபல ஆங்கிலக் கவியாகிய ராபர்ட் ப்ரௌனிங் (Robert Browning) தன் ஈடில்லாத கவிதைகளில் புகுத்தியிருக்கிறார். ப்ரௌனிங் என்பவர் ஒரு தத்வதர்சி. அவர் கவிதைகளில் பெரும்பாலும் ஈசுவர விகாஸத்தையும், மனிதனுக்கும் ஈச்வரனுக்கும் உள்ள தொடர்பையும் பற்றிய செய்திகளைக் காணலாம். முக்கியமாக அவர், வாழ்க்கையை மனிதன் எப்படி நடத்தவேண்டும், என்பதைக் காட்டுவதோடு, மனிதனின் இயல்பு (Nature) நடத்தை (Conduct) கடவுளிடம் தொடர்பு (Divine Connection), "தான்" யார் என்பதை அறிதல் (Study of "I") ஆன்ம விசாரம் (Self-Realisation) போன்ற அரிய தத்வங்களையும் நன்றாக சுட்டிக்காட்டியிருக்கிறார். இவைகள் அவருடைய கவிதையான "வாழ்க்கை விமரிசன" ("Criticism of Life") த்தில் காணப்படுகின்றன.

ப்ரௌனிங் ஈசுவரனைக் குயவனுக்கு ஒப்பிட்டு, குயவன் எப்படி மண்பாண்டங்களைச் செய்கிறானோ அதேபோல் ஈசுவரன் மனிதனைத் தன் இயல்புக்கு தகுந்தாற்போல் (Mental impressions or tendencies) சிருஷ்டிக்கிறான் என்கிறார். அதோடு இந்த வாழ்க்கை சிக்கலான பல பிரச்னைகளோடு (Complexity of Life) கூடியது என்கிறார். முக்கியமாக இது இரட்டை இயல்போடு (द्वैत-भाव – Dualistic) கூடியது. ஒன்று உடம்பை வளர்ப்பதற்கு வேண்டிய சாதனங்களைத் தேடுவது (life of flesh). மற்றொன்று இதற்கு அப்பாற்பட்ட ஈசுவரனை அறிய முயலும் முயற்சி (life of soul). ஒரு முயற்சி அதிகமானால் மற்றொன்றின் வளர்ச்சி தடைப்பட்டுவிடுகிறது. மனிதன் அன்றாடம் குடும்பவாழ்க்கையைச் சரிவர நடத்துவதில் கவனம் செலுத்திக்கொண்டு வந்தால் ஆத்ம வளர்ச்சிக்கும், விகாஸத்திற்கும் இடம் கிடைப்பதில்லை. அதேபோல் ஈசுவர விகாஸத்திற்கு வழி தேடுவதில் முனைந்தால், இந்த லோகத்திலுள்ள வஸ்துக்களிலும் அதன் வளர்ச்சியிலும் மனம் நாட்டம் கொள்வதில்லை. (Flesh helps and hinders Soul, Soul helps and hinders flesh) ஆன்ம

வளர்ச்சிக்கும், விகாஸத்திற்கும் மனிதன் பாடுபடவேண்டுமென்று கவி கூறுகிறார். " अजः शाश्वतः पुराणः " என்று ஆன்மாவின் தன்மையைப்பற்றிக் கூறுவதுபோல் ப்ரௌனிங் இந்த ஆத்மா மலையைப்போல் எப்பொழுதும் அழியாமல் இருப்பது என்கிறார். (Soul of man is as old as the everlasting hills). அதோடு பகவான் எல்லாப்பொருள்களிலும் இருக்கிறார் என்கிறார்.

... ... ... ... (God dwells in all,
From life's minute beginnings up at last
To man ... ... ... ... ... ... ...
... ... whose attributes had here and there
Been scattered o'er the visible world before.)

இந்த வாழ்க்கை ஒரு சக்ரத்தைப் போன்றது, அது சுழன்று சுழன்று வருகிறது. கண்ணுக்குப் புலப்படாத சக்தி ஒன்று மனிதனையும் எல்லா ஜீவராசிகளையும் அடக்கி ஆளுகிறது. அந்தச் சக்தியால்தான் இவைகளின் இருப்பு (existence) ஏற்படுகிறது. அந்தச் சக்தியைத்தான் கடவுள், பிரம்மம் என்கிறோம். கேனோபநிஷத்தின் ஆரம்பத்தில் கூறியபடி :

"केनेषितं पतति प्रेषितं मनः
केन प्राणः प्रथमः प्रैति युक्तः ।"

எந்தச் சக்தியால் மனம் பிரேரணை செய்யப்பட்டதாய், அந்தக் குறிக்கோளுக்குப் பாய்கிறதோ, எந்தச் சக்தியால் சகல ஜீவராசிகளுக்குள்ளும் முக்கியமான பிராணன் பிரவிருத்திக்கிறதோ அதுதான் பிரம்மம் என்று முடிக்கிறது அந்த உபநிஷதம். இந்தச் சந்தர்ப்பத்தில் ப்ரௌனிங் கூறுகிறார்: "நாம் எந்த வாழ்க்கைச் சக்கரத்தோடு இணைக்கப்பட்டிருக்கிறோமோ அது சுழன்றுகொண்டே போகிறது. போகிற போக்கில் அது சிலரை உயர்த்துகிறது; சிலரை தாழ்த்துகிறது."

(The wheel of life to which we are bound goes on spinning round and round, shaping pitchers, some to honour, some to dishonour)

(தொடரும்)

# தத்வ சிந்தனம்

ஸ்ரீ புரி ஸ்ரீ பார்ரதீ கிருஷ்ண தீர்த்த ஸ்வாமிகள்
( தமிழாக்கம் : ஸ்ரீமதி கோமதிராஜாங்கம் )

(முன் தொடர்ச்சி)

இன்னொரு கேள்வி: கேவலம் பரமாத்மாவே ஸத்யம் என்றால் மீதி எல்லாம் பொய் என்றால் நாம் இரண்டு பொய்களாகிற பாபம், புண்யம் என்ற பேதஜாலத்திலிருந்து ஒன்றைக் கைக்கொண்டு மற்றதை ஏன் தள்ளவேண்டும்? இதற்கு பதில் **कण्टकं कण्टकेनेव करेण च यथा करम्** (கண்டகம் கண்டகேனேவ கரேண ச யதா கரம்) உன்னுடைய காலில் முள் தைத்துவிட்டது. உடனேயே அதை எடுக்க நீ விரும்பினால் என்ன செய்வாய்? மற்றொரு முள்ளாலேயே அதை எடுக்க முயற்சிப்பாய். அச்சமயம் இதுவும் முள்தானே இதனால் அம்முள்ளை எவ்விதம் எடுப்பது என்று தர்க்கித்துக் கையில் இருக்கும் முள்ளை தூர எறிந்து விடமாட்டாய். இரண்டும் முள்களே யானாலும் ஒன்று துக்கத்தைக் கொடுப்பது. மற்றொன்று துக்கத்தை நீக்கி ஸுகத்தைக் கொடுப்பது. இவ்விதமே டாக்டர் மனிதனின் உடலில் இருக்கும் விஷநோயை இன்னொரு விஷத்தினால் விலக்க முயற்சிக்கிறார். இரண்டும் விஷமானாலும்கூட இரண்டிற்கும் பேதம் இருக்கிறது. ஒன்று உயிரைக்குடிப்பது. மற்றொன்று உயிரை ரக்ஷிப்பது. அதுபோல் பாபமும் புண்யமும் ஸந்தேகத்துக்கு இடமன்னியில் பொய்தான். ஆனால் ஒரு பொய் துக்கத்தைத்தருவது. மற்றொன்று ஸுகத்தைத் தருவது. உன் மனதில் பாபம் செய்வதினால் கஷ்டம் உண்டாகாவிட்டால் துக்கத்தினாலும் கஷ்டம் ஏற்படக் கூடாது. ஆனால் நீ ஸுகத்தை விரும்பினால் புண்யம் செய்துதான் தீரவேண்டும். காலில் முள்ளை எடுத்த பிறகு மற்றொரு முள்ளையும் தூர எறிந்து விடுகிறோமல்லவா? அதுபோல் பாபத்தை விலக்கப் புண்யம் செய்து அக்காரியம் முடிந்தவுடன் இரண்டிற்கும் அப்பால் விலகி நிற்பதே புத்திசாலித்தனம் ஆகும். சாஸ்திரம் கட்டளை இடுகிறது "**उभे पुण्यपापे विधूय**" (உபே புண்யபாபே விதூய) என்று. அதாவது புண்யம் பாபம் இரண்டிலிருந்தும் விலகி நில்.

இப்பொழுது ஒரு ஸந்தேஹம் கிளம்புகிறது. ஒருவன் பாபம் செய்வதை முற்றிலும் விட்டுவிடுகிறான். ஒரு பாபம் கூட செய்வதில்லை. அடுப்பில் கொதித்துக்கொண்டிருக்கும் வெந்நீர்த் தவலையை கீழே இறக்கி வைத்துவிட்டால் சிறிது நேரத்தில்

அத்தண்ணீர் சூடு நீங்கி குளிர்ந்து விடுவதுபோல் பந்தத்திற்கு காரணமான பாபத்தைச் செய்யாமலே ஒருவன் இருந்து வருவானே யாகில் அவனுக்குத் தானகவே பந்தம் நீங்கிவிடுமல்லவா! ஆகவே சிரவணம், மனனம், நிதித்யாஸனம் இவைகளெல்லாம் அவனுக்குத் தேவையில்லையல்லவா! பாபம் செய்யாதே என்று மட்டும் உபதேசித்தால் போதாதா? சிரவண – மனன – நிதித்யாஸனங்கள் மூலம் ஆத்மாவை அறிந்து அதனுடன் ஒன்றிக்கலக்கவேண்டும் என்பதெல்லாம் எதற்காக?

இதற்கு இருவிதங்களில் பதில் கூற முடியும். முதலாவது:— நெருப்பில் காயும் தண்ணீரை இறக்கிவைத்தால் அது குளிர்ந்துவிடும் என்பது சரியே. ஆனல் அது குளிர்ச்சியாக எவ்வளவு நேரம் பிடிக்கும்? உன் விருப்பப்படி அது குளிர்ச்சியாகாது. அதனுடைய உஷ்ணத்தின் டிகிரியைப்பொறுத்து எவ்வளவு காலம் ஆகுமோ அவ்வளவு காலத்துக்குப்பின்தான் அது குளிர்ச்சியாகும். ஆனல் உனக்கு தாகம் அதிகமாக இருக்கிறது. அது ஆறிப்போகும்வரை உன்னல் பொறுக்கமுடியாதென்றல் அதைச் சீக்கிரமாகக் குளிர வைப்பதற்கான முயற்சியைச் செய்கிறாய். அதை ஒரு பாத்திரத்திலிருந்து மற்றென்றில் தூக்கித்தூக்கிவிட்டு ஆற்றுகிறாய். அல்லது பனிக்கட்டியின் மேல் வைக்கிறாய். இம்முயற்சியினல் அது சீக்கிரம் குளிர்ந்துவிடுகிறது. அதுபோல் நாமும் இந்த ஜன்மத்திலும் முந்தின ஜன்மங்களிலும் அநேக பாபங்களைச் செய்திருக்கிறோம். அதனல் ஏற்கனவேயே நாம் பாபங்களின் பலனை அனுபவிக்கவேண்டியிருக்கிறது. நாம் மறுபடியும் பாபம் செய்யாமல் நம்முடைய முந்தின ஜன்மத்தின் பாபகர்மங்களை பொறுமையாக அனுபவித்துக்கொண்டு காத்திருந்தோமானல் அப்பாபங்களும் அநுபவித்து அநுபவித்து நசித்துவிடும். இது நேரான முறைதான். ஆனல் இது நடக்கக் கூடியதல்ல. சீக்கிரமாகவே நாம் பாபங்களிலிருந்து விடுதலையை விரும்புகிறோம். நீ கஷ்டத்தையே அனுபவிக்காவிட்டால் ஒருவரும் உன்னைப் புண்யம் செய்து பாபத்திலிருந்து விடுதலையடை என்று கூறமாட்டார்கள். ஆனல் துக்கப்படுகிறாயானல் அதிலிருந்து விடுபட முயற்சிப்பதும் அவசியமே. அலங்கரித்துக்கொண்டு கண்ணடியில் உன் உருவத்தைப்பார்த்தாயானல் அது உனக்கு அழகு பிம்பமாகத்தோன்றும். அப்பொழுது நீ கண்களை மூடிக்கொள்ள வேண்டாம். ஆனல் உன் முகம் அதில் அவலக்ஷணமாகத் தோன்றினல் அதைப்பார்க்க உனக்கு விருப்பம் இல்லையானல் உன் கண்களை மூடிக்கொள்ளுகிறாய். இதைப்போல உனக்கு ஒருவித கஷ்டமோ துக்கமோ இல்லாவிட்டால் எப்பொழுதும், ஆனந்தக்கடலிலேயே

மூழ்கிக்கிடந்தாயானால் நீ உன் லக்ஷ்யத்தை அடைந்துவிட்டதாகவே நான் கூறுவேன். அப்பொழுது உனக்கு சிரவண மனனங்களின் அவசியம் ஏற்படாது. ஆனால் நீ துக்கப்படுவாயானால் அதிலிருந்து மீட்சிபெற விரும்புகிறாயானால் தண்ணீரைச் சீக்கிரம் குளிரவைக்க பனிக்கட்டி முதலிய ஸாதனங்களை உபயோகப்படுத்துகிறதுபோல் உனக்கும் சிரவண மனனாதி ஸாதனங்களை மேற்கொள்ளவேண்டியே இருக்கும். இவைகளின் உதவியால் பாபங்களிலிருந்து சீக்கிரம் விடுபட்டு மோக்ஷப்பாதையில் முன்னேறலாம்.

இரண்டாவது: தண்ணீரைச் சூடாக்கும் பாத்திரத்தை அடுப்பிலிருந்து இறக்கிவிட்டால் என்னவாகும்? இதற்கு விடை கூறுமுன் இன்னொரு விஷயம் சொல்லவேண்டும் இங்கு, அக்னி தீ என்ற பதத்துக்கு என்ன அர்த்தம் என்று தெரிந்துகொண்ட பிறகுதான் இதற்கு விடை கூறவேண்டும் சாஸ்திரம் கூறுகிறது '**अविद्याकाम-कर्मभिः जन्म**' என்று. நம்முடைய அநுபவம் நமக்கு எதை எடுத்துக் காட்டுகிறது? நம்மை பந்தத்தில் கட்டுவதற்கு மூன்று பொருள்கள் காரணமாகின்றன. இவைகள்தான் நம்முடைய பிறப்பிற்குப் பொறுப்பாளிகள். இந்தப் பிறப்பைக் கொடுத்து நம்முடைய ஆத்மாவை மறக்கச் செய்வதற்கு இவைகள்தான் உத்திரவாதிகள். ஒன்று அக்ஞானம். நம்முடைய எல்லையில்லா உருவைப்பற்றி நாம் அறியாதபடி இது மறைக்கின்றது. இரண்டாவது இச்சை அதாவது உலகப்பொருள்களில் அளவற்ற ஆசை. மூன்றாவது "கர்மம்" நம்முடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்ய நாம் செய்யும் முட்டாள்தனமான சில காரியங்கள். அக்ஞானத்தினாலேயே நம் மனதுக்குள் விருப்பு வெறுப்புகள் உண்டாகின்றன. இச்சையே நம்மைச் செயலில் தூண்டுகிறது. அச்செயல்களின் பலனை அநுபவிக்கவே நாம் அநேகவிதமான உடல்களை எடுத்துக்கொண்டு மாறி மாறிப் பிறக்கிறோம். இதனால் நாம் நம்முடைய இந்திரியங்கள் மனம், புத்தி, இவைகளுக்கு அடிமையாகிறோம். அதனால் நம்முடைய பந்தத்துக்கு மூலகாரணமான அக்ஞானத்தை வேருடன் களையாவிடில் நம் பந்தங்கள் ஒரு நாளும் நீங்காது. அதாவது நம்முடைய ஆத்ம தரிசனமாகிய தண்ணீரை சூடாக்கக் காரணமாக இருக்கும் நெருப்புக்குப் பெயர் அக்ஞானம். சிரவண மனனங்கள் ஆகிய செயல்களினால் அந்நெருப்பை அவிக்க முயற்சிக்கவேண்டும். அது வரை அத்வைத தரிசனமாகிய தண்ணீர் குளிர்ச்சியாகாது. இப்பொழுது சிரவண மனனாதி சாதனங்களின் அவசியம் என்ன என்பதை ஒருவாறு புரிந்துகொண்டோம்.

## சில விதிகள்

ஜீவாத்மா தெய்வீக ஆனந்தத்தைவிட்டு அக்ஞானமும் துக்கமுமாகிய காட்டில் அலேவானேன்? பிறகு எவ்விதம் தன் ஸ்வரூப பிரகாசத்தை அடைகின்றது? என்பவைகளைப்பற்றி வேதாந்த சாஸ்திரத்தில் மிகவும் ருசிகரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவருஷத்தில் பன்னிரண்டு மாதங்கள் வருகின்றனவல்லவா? அவைகளின் பெயர்களை ஆதாரமாகக்கொண்டு ஸம்ஸ்கிருத பாஷையில் இதை வர்ணித்திருக்கிறார்கள். அவைகளின் சுருக்கம் பின் வருமாறு:

**चैत्रः** (சைத்ரம்): இப்பெயர் ஆத்மாவின் விசித்திரத் தன்மையை குறிக்கின்றது பரமாத்மாவின் ஸங்கல்பமானது வைசித்ரியத்தைத் தோற்றுவிக்கிறது பிரம்மம் தன்னை அநேக உருவங்களாகக் கல்பனை செய்துகொள்ளும் விசித்ரத்தைச் சுட்டிக்காட்டுகிறது.

**वैशाखः** (வைசாகம்): இதன் அர்த்தம் சாகோபசாகையாகக் கிளைகளை விஸ்தரித்தல் அதாவது பிரம்மம் தன்னுடைய படைப்பை (Manifestation) எத்துணை கிளைகளாகப் பிரிக்கின்றது என்பதைக் குறிக்கும்.

**ज्येष्ठः** (ஜ்யேஷ்டம்): இதன் அர்த்தம் பெரியது என்பது. அனேகப் பொருள்களை ஒருமையாக்கி பெரிய அளவை முடிவுகட்டும் பெயர். சுருதி கூறுகிறது. '**द्वितीयाद्वै भयं भवति**' (த்விதீயாத் வை பயம் பவதி) தன்னைத்தவிர மற்றொன்று இருப்பின் பயம் உண்டாகிறது. அதாவது மனிதருக்குள் அதிகாரம், வஸதி உன்னதி, பெருமை இவைகளை அடைவதற்கு பெரிய சச்சரவும் பயமும் உண்டாகின்றது.

**आषाढः** (ஆஷாடம்): இதன் அர்த்தம் நாலாபக்கங்களிலிருந்தும் ஏற்படும் சகிக்கமுடியாத துக்கம். மேற்கூறிய அதிகாரம் முதலிய போட்டியினால் எப்படி பெரிய நாசம் ஏற்படுகின்றது என்பது இப் பெயரில் மறைமுகமாகத் தொக்கி நிற்கின்றது. மனிதன் இப்படிக்கு வந்ததும், நாம் ஏன் இத்தனை துக்கப்படுகிறோம் என்று ஆச்சர்யப் படுகிறான். மேலும் இந்த துக்கத்துக்குக் காரணத்தைக் கண்டுபிடிக்க முயற்சிக்கிறான்.

**श्रावणः** (சிராவணம்): இதன் அர்த்தம் குருவினிடமிருந்து சிரவணம் செய்தல். அதாவது மனிதன் துக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு துக்கத்து[illegible] பின்னால் மறைந்து நிற்கும்

உண்மையைத் தேடுவதற்கு முயற்சி செய்கிறான். அதை அறிவதற்கு குருவின் உதவியை நாடுகிறான்.

**भाद्रपद:** (பாத்ரபதம்): இதன் அர்த்தம் ஆனந்தத்தின் ஸ்திதி அதாவது இருப்பிடம் பத்ர = ஆனந்தம், ஸந்தோஷம். பதம் = நிலே, ஸ்திதி அதாவது நம்மை இந்நிலேவரை கொண்டுவந்த ஆதி காரணத்தின் அறிவு ஞானம். இது இவ்வுத்தேசத்தை எடுத்துக் கூறுகிறது. அதை அடைவதற்கு சாதனை புரிவதான ஆனந்தத்தை அடைகின்றது.

**आश्विन:** (ஆச்வினம்): இந்த சப்தம் ஸம்ஸ்கிருத வியாகரணப்படி "அச்" (अश) என்ற தாதுவிலிருந்து வந்தது. இதன் அர்த்தம் பரவுதல் மோதுதல். இது பரமாத்மா எங்கும் பரவி நிற்கிறான், நம் சரீரத்துள்ளும் ஜீவாத்மாவுடன் மோதுகிறான் என்பதைக் குறிக்கின்றது. அப்படி எங்கும் நிறைந்த ஸர்வ வ்யாபியான சரீரத்துள்ளும் உறையும் ஆத்மாவை தரிசனம் செய் என்று கூறுமல் கூறுகிறது. அப்பொழுது இந்த சரீரம் யாது என்பது தெரியவரும்.

**कार्त्तिक:** (கார்த்திகம்): இதன் அர்த்தம் தோல் அதாவது மேலே மூடியிருக்கும் மறைப்பு ஆவரணம் இப்பதம் மேலே கூறியதற்கு விளக்கமாக அமைகின்றது. இச் சரீரம் நம் உள்ளும், வெளியிலும் உறையும் பரமாத்மாவுக்குப் போர்த்திக்கொள்ளும் போர்வை. அதாவது மறைக்கும் திரை. அடுத்த வினு சரீரத்துக்கும் ஆத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தம். நாம் இவைகளில் எதை நாடுவது என்பது. அதன் விடையாக,

**मार्गशीर्ष:** (மார்கசீர்ஷம்): அதாவது சீர்ஷம் என்ருல் தலே, முக்யம் என்று பொருள். அதைக்காண வழி, மார்க்கம் தேட வேண்டும். அதாவது எல்லாவற்றிற்கும் தலேயான ஆத்மாவைக்காண வழி தேடவேண்டும்.

இதுவரை சிரவண மனனங்களேப்பற்றிக் கூறிக்கொண்டு வந்தோம். நாம் இதுவரை அரைகுறையாக எதைத் தெரிந்து கொண்டோமோ, அது வேதாந்தத்தில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆனுல் இதனுல் மட்டும் நமக்குத் திருப்தியுண்டாகாது. ஏனென்ருல் அநேக ஜன்ம ஜன்மாந்தரங்களில் உலக விஷயங்களேயே உபாஸித்துக்கொண்டு வந்தோம். அதன் ஸம்ஸ்காரங்களிலிருந்து நாம் எளிதில் விலக ஒண்ணுதபடி அவைகளிடம் நாம் தாமரைக்கொடியில்

போன்று சிக்கிக்கொண்டிருக்கிறோம். இவ்வாஸனையை சாரீரக விஞ்ஞானம் நம் செயல்களின் அநுபூதி என்றும், சாதாரண மனிதன் தொன்றுதொட்டு வந்த பழக்கம் என்றும் கூறுகிறார்கள். இதனால் நாம் பலவித கஷ்டங்களை அநுபவிக்கிறோம். இவ்வாஸனையை ஒழிக்க உத்தமமான எண்ணங்களை அடிக்கடி சிந்தித்துப் பார்ப்பதே சரியான வழி. சிலசில சமயங்களில் இவ்வாசனையின் பலத்தினால் கொடூரமான பாப கர்மங்களையும் செய்துவிட நாம் சிறிதும் அஞ்சுவதில்லை. இது நற்சிந்தனை ஒன்றினால்தான் நம்மை விட்டு விலகும். நீதிபரமான உத்தம எண்ணங்கள் ஒரு பொழுதும் நம்மைக் கெட்ட வழியில் செலுத்தாது. நற்செயல்களால் இவ்வாஸனை ஒழிந்துவிடும். இம்முயற்சியையே நாம் நிதித்யாசனம் என்று கூறுகிறோம். எப்பொழுதும் பெருகுகிற ஞானதாராப்ரவாஹமே நிதித்யாசனமாகும். உயர்ந்த எண்ணங்களை இடைவிடாமல் சிந்திக்கும்போது அறிவிலும் மனத்திலும் மூலை முடுக்குகளில் ஒதுங்கி ஒளியும் கெட்ட எண்ணங்கள் நீங்கிவிடுகின்றன. அவைகளை அழிக்க இந்த தாரா பிரவாகம் ஒன்றினால்தான் முடியும். இவ்விதமாக இம்மூன்று படிகளும் அமைகின்றன.

1. சிரவணம்: இதனால் நாம் வித்வான்களுடைய நூலிலிருந்து பெருகும் ஞானமிருதத்தைப் பருகுகிறோம்.

2. மனனம்: இதனால் நம்முடைய மனத்துள் ஓடும் எல்லா சந்தேகங்களையும் நீக்குகிறோம். இதனால் கடினமான செயல்களை எண்ணங்களைக்கூட எளிதாக்கமுடியும்.

3. நிதித்யாஸனம்: இதனால் நாம் இதுவரை கற்றுவந்த உயர்ந்த எண்ணங்களை வாழ்க்கையில் உபயோகத்தில் கொண்டுவர முயலுகிறோம். நம்முடைய தினசரிச் செயல்களை அந்த உயர்ந்த எண்ணங்களுக்குச் சரியாக மாற்ற முயலுகிறோம். இதுநிற்க

**पौषः** (பௌஷம்): **पुष** என்ற தாதுவிலிருந்து இச்சொல் வந்தது. புஷ்டியாக்குதல் என்று அர்த்தம். அதாவது உயர்ந்த எண்ணங்களைச் சிந்தித்துச் சிந்தித்து புஷ்டியாக்குதல். ஒருவன் இந்நிலைக்கு வந்துவிட்டானானால் அவன் செய்வதற்கு ஒன்றும் பாக்கியில்லை என்றாலும் அவன் உயிருடன் இருக்குமளவும் ஏதாவது ஒரு கர்மத்தை செய்துகொண்டே இருக்கவேண்டுமென்பது இயற்கையின் நியதி. இந்நிலையில் அவன் எதைச் செய்யவேண்டும்? எதை விடவேண்டும்? இதற்குப் பதில் இதோ—

**माघः** (மாகம்): **अघ, मा, — माघ** — பாபம் வேண்டாம், அதாவது பாபம் செய்யாதே என்று அர்த்தம். இனிமேல் அவன் பாபம் செய்யமாட்டான். எவன் ஜீவாத்ம பரமாத்ம ஐக்யத்தைக் கண்டு கொண்டானே, அவன் பாபம் செய்யான். அவன் ஹானி, லாபம், தன்னலம் இவைகளிலிருந்து வெகுதூரம் விலகி புண்யத்தையும் நற் செயல்களையுமே செய்வான்.

**फाल्गुनः** (பால்குனம்): பலமே குணம் அதாவது இதுவரை கெட்ட குணங்களே அவனுக்கு பலமாக அமைந்தன இனி அவன் ஒரு பொழுதும் நீசச் செயல்களைச் செய்யமாட்டான் அல்லது பலஹீனமான, அல்பமான, ஸாரமற்ற விஷயங்கள் இவனை அழைத்துச்சென்றன. இனி அவற்றை நோக்கிச் செல்லமாட்டான். ஆகவே நாம் கடைசியில் **उभे पुण्यपापे विधूय** (உபே புண்யபாபே விதூய) நம்முடைய தன்னலத்துக்காக புண்யமோ பாபமோ செய்யாமல் இருக்கவேண்டும். பலனை உத்தேசித்துச் செய்யும் எவ்விதச் செயல்களும் தாழ்ந்தவை களே. ஒவ்வொரு செயலையும் நிஷ்காம்ய புத்தியுடன் கடமை உணர்ச்சியுடன் ஈசுவரார்ப்பணமாகச் செய்யவேண்டும். அதுவே உத்தம மார்க்கம்.

இவ்விதமாக நாம் மெல்லமெல்ல அத்யாத்ம ஏணியில் ஒவ்வொரு படியாக ஏறுகிறோம். மெல்ல மெல்ல உயரே உள்ள படிகளையும் அடைவோம். கடைசிப் படியை அடையும்போது நிஷ்காம்ய கர்மத்தைத் தவிற வேறு ஒன்றும் இராது இப்பொழுது கடைசி மாதமாகிய பால்குனத்துடன் வருஷசக்ரம் முடிவடைகிறது பதிமூன்றாவது மாதத்துக்கு இங்கு அவசியமும் இல்லை.

## தெய்வீக சக்தி

ஸத்து சித்து ஆனந்தமான தெய்வீக சக்தி நம்முள் இருக் கின்றது. அதை நாம் ப்ரத்யக்ஷமாகப் பார்க்கவேண்டும். அதனைப்பெறவேண்டும். அதற்காக நம்முடைய சக்தியை நான்கு மடங்காகப் பெருக்கவேண்டும் ஏனென்றால் வேதம் கூறுகிறது:

**नायमात्मा बलहीनेन लभ्यः (मुण्ड ३-२)**

(நாயமாத்மா பலஹீனேந லப்ய:)

என்று. பலஹீனனால் ஆத்ம சக்தியை அநுபவித்தறிய முடியாது. கீதையில் அர்ஜுனனுடைய ஹ்ருதய பலஹீனத்தை எடுத்துக் காட்டி ஸ்ரீபகவான் கூறுகிறார்—

क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप । (२-३)

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ (२-३८)

க்ஷுத்ரம் ஹ்ருதய தௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ।

ஸுகதுக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ॥
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபம் அவாப்ஸ்யஸி ॥

'ஹே அர்ஜுனு, உன் ஹ்ருதய பலவீனத்தைக் களைந்துவிடு. எழுந்திரு யுத்தம் செய். சுகதுக்கம், லாபநஷ்டம், ஜயாபஜயம் இவை களைப் பற்றி கவலை கொள்ளாமல் யுத்தம் செய்து உன்னுடைய தர்மத்தைக் கடைப்பிடி அப்பொழுது பாபம் உன்னைத் தொடக்கூட மாட்டாது.' ஆனுல் அந்தோ நம்முடைய சக்தியாவும் சரீர வாசனையி லைன்றே நஷ்டமடைகின்றது. அப்படி ஆகாமல் நம் சக்தி பூரு வாக நற்கருமங்களில் உபயோகிக்கவேண்டும். உன்னுடைய மனே சக்தியை உன்னை யடக்கியாளவும் மற்றவருக்கு உதவி செய்யவும் உபயோகப்படுத்து இல்லாவிட்டால் நீ சரீரத்தைப் பொருத்து பல வானுக இருந்தாலும் உள்ளத்தில் பலஹீனனுகவே இருப்பாய். காமக்ரோதங்களினின்று விடுபட்ட சக்தியே தெய்வீக சக்தி. ஆங்கில மகாகவியான ஷேக்ஸ்பியரும் இதையே கூறுகிருர். ராக்ஷஸனைப்போல் பலசாலியாக இருப்பது மேன்மைதான் ஆனுல் அப்பலத்தை அவர்களைப்போல் மக்களைத் துன்புறுத்த உபயோகிப்பது நல்லதல்ல உன்னுடைய சரீரம் மனம் புத்தி பொருளாதார சக்திகளை மற்றவர்களுக்கு உதவி புரிவதற்க்காகச் சிலவழி. அவர்களைத் துன்புறுத்த சிலவிடாதே.

(தொடரும்)

देहीति वचनं कष्टं नास्तीति वचनं तथा ।
देहि नास्तीति वचनं माभूज्जन्मनि जन्मनि ॥

— மஹாபாரதம்

# தைத்திரீயோபநிஷத்

[V. S. மணி அய்யர், கிருஷ்ணபுரம்]

## அங்கம் 3 காட்சி 4

[திரை தூக்கப்பட வைசம்பாயனரின் ஆசிரமத்தில் பகவான் வருணரும் சீடர்களும் அமர்ந்திருக்கிறார்கள்.]

**வருணர்** :— வத்ஸர்களே! நேற்று உபதேசித்த பாடங்களை நன்ருய் மனனம் செய்து சிந்தித்தீர்களா? ஏதாவது ஸந்தேகங்கள் உண்டா? சங்கோசமில்லாமல் — பயமில்லாமல் — கேளுங்கள் தீர்த்துவைக்கின்றேன்.

**த்ரிசங்கு** :— குருநாதரே, சந்தேகமின்றித் தெரிந்துகொண்டோம். மேலும் தொடர்ந்து உபதேசிக்க வேண்டுகின்ருேம்.

**வருணர்** :— சரி உபதேசிக்கிறேன். கவனத்துடன் கேளுங்கள்.

असन्नेव स भवति। असद्ब्रह्मेति वेद चेत्। अस्ति ब्रह्मेति चेद्वेद। सन्तमेनं ततो विदुरिति। तस्यैष एव शारीर आत्मा। यः पूर्वस्य।

அஸந்நேவ ஸ பவதி I அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் I அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத I ஸந்தமேநம் ததோ விதுரிதி I தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா I ய: பூர்வஸ்ய I

எவன் பிரம்மம் இல்லை என்று எண்ணுகின்ருனோ, அவன் அஸத் ஆகிருன். அதாவது பிரம்மத்தை இல்லை என்று கருதுகிறவன் கெட்டொழிந்தவனுகிருன். உண்டு என்று ஸத்தாக பிரம்மத்தை நினைப்பவன் ஸத்தாக அதாவது ப்ரஹ்மமாக ஆகிருன். பிரம்மம் உண்டு என்று கருதுகிறவனை ஸத்தான ப்ரஹ்மம் என்று பிரம்ம வித்துக்கள் கருதுகின்றனர். முற்பட்ட விக்ஞானமய சரீரத்துக்கு இந்த ஆனந்தமயமே சரீரம் படைத்த ஆத்மாவாகிறது.

**போதாயனர்** :— பொருளைக்கேட்டால் நன்ருகப் புரிந்ததுபோல் தோன்றுகிறது. ஆனுல் தெளிவாகவும் தெரியவில்லை. கொஞ்சம் கூட விளக்கிக் கூறும்படி வேண்டுகின்றேன்.

**வருணர்** :— உலகில் வாஸ்தவமாக இருக்கும் பொருள் ப்ரஹ்மம் ஒன்றுதான். இந்த ப்ரஹ்மத்தை அறிவதன் மூலம்தான் மோக்ஷம்

என்ற புருஷார்த்தத்தை அடைகிறான். இந்த ப்ரஹ்மத்தை இல்லை என்று ஒருவன் தீர்மானிப்பானேயாகில் அவன் ஒரு நாளும் ப்ரஹ்மத்தை அறிய முயற்சிக்கமாட்டான். அவன் எப்படி ப்ரஹ்மமாக ஆகமுடியும்? ப்ரஹ்மமாக ஆவதுதான் சிறந்த புருஷார்த்தம். இதை ஒரு நாளும் இவன் அடையமுடியாது இதற்கு மாறாக ப்ரஹ்மம் இருக்கிறது என்று ஒருவன் அறிவானேயாகில் அவன் ஸத்தான அந்த ப்ரஹ்மமாக ஆகிவிடுவான். ப்ரஹ்ம வித்துக்கள் இவனை ஸத்தான ப்ரஹ்மமாகத் தெரிந்துகொள்வார்கள். ஸத்பதத்திற்கு ப்ரஹ்மம் என்ற பொருளைக்கொண்டு இவ்வாறு கூறப்பட்டது. ஸத்பதத்திற்கு ஸாது என்றும் அஸத்பதத்திற்கு அஸாது என்றும் பொருள் கொண்டால் மற்றொரு விதமாகவும் கூறலாம். அதாவது எவன் ப்ரஹ்மத்தை இல்லை என்று தீர்மானிக்கிறானோ அவன் ப்ரஹ்மத்தை அறிவதற்கு வழியான (உபாயமான) வர்ணாச்ரம தர்மம் முதலியவைகளையும் இல்லையென்றே கூறுவான். அதில் அவனுக்கு நம்பிக்கை இருக்காது. ஆகவே நாஸ்திகனான அவனை பெரியோர்கள் 'அஸாது' என்று கூறுவார்கள். இதற்கு மாறாக எவன் ப்ரஹ்மம் ஸத் - இருக்கிறது - என்று தீர்மானிக்கிறானோ அவன் சிரத்தையுடன் ப்ரஹ்மத்தை அறியும் ஸாதனமான வர்ணாச்ரமாதி தர்மங்களைக் கைக்கொள்வான். ஆஸ்திகனான இவனை மஹான்கள் 'ஸாது - நல்வழியில் செல்கிறவன்' என்று கூறுவார்கள். ஆதலால் உயர்ந்த புருஷார்த்தத்தை அடையவும் உலகில் ஸாது என்று பெயர் எடுக்கவும் அடிப்படையாக ப்ரஹ்மம் இருக்கிறது என்று உறுதி கொள்ளவேண்டும். வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாததாயிருப்பதால் அறிவாளிகள்கூட ப்ரஹ்மத்தை இல்லை என்று தீர்மானித்து விடுவார்கள். அதற்காகத்தான் வேதம் ப்ரஹ்மம் உண்டு என்பதை வற்புறுத்திக் கூறுகிறது.

த்ரிசங்கு :— ஐயனே! இனி இதை அநுசரித்த கேள்விகள் கேட்கலாமா? **अथातोऽनुप्रश्नाः** (அதாதோநுப்ரச்நா:)

வருணர் :— குழந்தாய்! தாராளமாகக் கேட்கலாம்.

த்ரிசங்கு :—

**उताविद्वानमुं लोकं प्रेत्य । कश्चन गच्छती ३ । आहो विद्वानमुं लोकं प्रेत्य । कश्चित्समश्नुता ३ उ ।**

உதாவித்வானமும் லோகம் ப்ரேத்ய। கச்சந கச்சதீ 3; ஆஹோ வித்வாநமும் லோகம் ப்ரேத்ய, கச்சித் ஸமச்நுதா 3 உ ।

பிரம்மத்தை அறியாதவன் சரீரத்தை விட்டபின் அந்த உலகை (பரமாத்மாவை) அடைவனு? தவிர பிரம்மத்தை அறிந்தவன் சரீரத்தை விட்டபின் அந்த உலகை (பரமாத்மாவை) அடைவனு?

வருணர்:— சபாஷ் த்ரிசங்கோ! நல்ல சாதுவான கேள்விகள். இந்தக் கேள்விகளை இன்னும் பிரித்துக் கேட்கலாம். மாஹாசமஸ்யா! நான்காகப் பிரித்துச் சொல்வாய்!

மாஹாசமஸ்யர்:— குருநாதரே அவ்விதமே செய்கிறேன். (1) அவித்வானுன பிரம்மஞானமில்லாதவன் இங்கிருந்துபோய் அந்த லோகத்தை (ப்ரஹ்மத்தை)ச் சேருகின்றனு? (2) அல்லது அந்த அக்ஞானி சேரவில்லையா? (3) வித்வான் பிரம்மஞானியானவன் பரமாத்ம லோகத்தைச் சேருகின்றனு? (4) அல்லது அவனும் சேரவில்லையா?

வருணர்:— குழந்தைகளே! இந்தக் கேள்விகளுக்கு விடை "இல்லை" அல்லது "உண்டு" என்று சில சொற்களில் கூற நான் விரும்பவில்லை. விவரமாக, தெளிவாகக் கூற விரும்புகின்றேன். தவிர பாடம் தொடங்கிய முதல் நாளே விடையும் கூறியிருக்கிறேன். ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். இப்போது மிகவும் தெளிவாகக் கூறுகிறேன் கவனமாகக் கேளுங்கள்.

போதாயனர்:— ஐயனே! அப்படியே ஆகட்டும்.

வருணர்:—

सोऽकामयत । बहु स्यां प्रजायेयेति । स तपोऽतप्यत । स तपस्तप्त्वा । इदꣳसर्वमसृजत । यदिदं किंच । तत्सृष्ट्वा । तदेवानुप्राविशत् । तदनुप्रविश्य । सच्च त्यच्चाभवत् । निरुक्तं चानिरुक्तं च । निलयनं चानिलयनं च । विज्ञानं चाविज्ञानं च । सत्यं चानृतं च सत्यमभवत् । यदिदं किं च । तत्सत्यमित्याचक्षते । तदप्येष श्लोको भवति ।

ஸோऽகாமயத । பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி । ஸ தபோऽதப்யத । ஸ தபஸ்தப்த்வா । இதம் ஸர்வமஸ்ருஜத । யதிதம் கிம் ச । தத் ஸ்ருஷ்ட்வா । ததேவாநுப்ராவிஶத் । ததநுப்ரவிச்ய । ஸச்ச த்யச்சாபவத் । நிருக்தம் சாநிருக்தம் ச । நிலயனம் சாநிலயனம் ச । விக்ஞாநம் சாவிக்ஞாநம் ச । ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமபவத் । யதிதம் கிம்ச । தத்ஸத்யமித்யாசக்ஷதே । ததப்யேஷ ச்லோகோ பவதி ।

அந்த பரமாத்மா – ஆகாசம் முதலியவைகளுக்குக் காரணமான பிரம்மம் – வெகுவாக விரிந்து வளரவேண்டும் என்று ஸங்கல்பித்தது. அதற்காகத் தவத்தைச் செய்தது. தவம் செய்து இங்கு ஏதேது உண்டோ – எல்லாவற்றையும் சிருஷ்டித்தது. அப்படி சிருஷ்டித்து அதனுள் புகுந்தது. சிருஷ்டியுள் நுழைந்து உருவாகவும் அருவாகவும் அதுவே ஆயிற்று. ஸகுணமாயும் நிர்க்குணமாயும், இடமுடையதாகவும், இடமில்லாததாகவும், சித்தாயும், அசித்தாயும், உண்மையாகவும், பொய்யானதாயும் ஆயிற்று. இங்கு ஏதேது உண்டோ அது எல்லாமாக அந்த ஸத்தியமே ஆயிற்று. ஆகையினால் ஸத்தியத்திற்கும் ஸத்தியம் என்று அதற்குப் பெயர். அதைப்பற்றி பின்வரும் மந்திரமும் உளது.

த்ரிசங்கு:— ஸ்வாமீ! மிகுதியாக ஆவேன் என்று இச்சித்த பிரம்மம் எப்படிப்பட்ட தவம் செய்தது? அந்தத் தவம் யாரைக் குறித்து? விளக்க வேண்டும்.

வருணர்:— தவம் செய்தது என்றால் நம்மைப்போல் தவம் செய்வது என்ற பொருள் இல்லை. ஆகையால் ஒருவரைக் குறித்து தவம் என்ற கேள்வி எழவில்லை. தவம் செய்தது என்றால் ஞான ஒளியைப் பரப்பிற்று. சிருஷ்டிக்கிரமத்தையும், சிருஷ்டிக்கப்பட வேண்டிய ஜகத்தை உண்டுபண்ணுகிற விதம் முதலானவைகளைப் பற்றியும் தீவிரமாக ஆலோசித்தது என்றுதான் அர்த்தமாகும். அப்படி ஆலோசித்து இதோ காணப்படுகின்றவை, இன்னும் எவை, எவை உண்டோ அவை அனைத்தையும் சிருஷ்டித்தது. பிராணிகளுடைய கர்ம பலன்களுக்கு அனுரூபமாக இந்த ஜகத்தை உண்டு பண்ணியது.

மாஹாசமஸ்யர்:— குருநாதரே! பிரம்மத்தினால் ஏற்பட்ட சிருஷ்டியைப் பற்றி அறிந்து கொண்டோம். அது ஸர்வ வியாபக வஸ்துவாகவிருப்பதால் சிருஷ்டித்து அதனுள் புகுந்தது என்பது சரியல்லவே. அது தன் சுயரூபத்தில் புகுந்ததா? அல்லது வேறு அன்னிய உருவிலா?

வைகானஸர்:— உள்ளே இல்லாமல் வெளியே இருக்கும் பொருள் தான் உள்ளே நுழையக்கூடும். ஏற்கெனவே உள்ளே இருக்குமாகில் அந்தவஸ்து உள்ளே நுழைகிறது என்று எப்படிக் கூற முடியும்? ப்ரஹ்மமே தான் ஜகத்தாகப் பரிணமித்திருக்கிறது அந்த ஜகத்துக்குள்ளும் வெளியிலும் எங்கும் எப்பொழுதும் நிறைந்து உள்ளது ப்ரஹ்மம். இப்படிப்பட்ட ப்ரஹ்மம் உள்ளே நுழைந்தது என்று

கூறினால் அது எப்படிப் பொருந்தும்? உள்ளே நுழைவதற்கு முன்னால் உள்ளே ப்ரஹ்மம் இல்லை என்று கூறவேண்டும். அப்பொழுது ப்ரஹ்மம் வியாபகமில்லை என்று ஆகிவிடும்.

வருணர்:— ஜகத்வேறு பிரம்மம்வேறு அல்ல. வீடு கட்டி ஒரு மனிதன் கிருஹப்பிரவேசம் செய்வதுபோல் பிரம்மம் ஜகத்தை சிருஷ்டித்து அதனுள் நுழைந்ததாக அர்த்தம் இல்லை. நிர்மலமான தடாக ஜலத்தில் ஸூர்ய பிரதிபிம்பத்தைப் பார்க்கும்போது அதில் பகலவன் பிரவேசித்திருப்பதாக நினைக்கிறோமல்லவா. அதுபோலவே தான் இங்கும். உண்மையில் இல்லை. பிரவேசித்ததுபோல் தோன்றுகிறது அவ்வளவுதான் ஸர்வ விகல்பங்களுக்கும் அதாவது சிருஷ்டிக்கும் காரணம் பிரம்மம். அது நிர்விகல்பமாயிருந்தும் தனது சுய சங்கற்பத்தினால் எல்லாமாகவேண்டி பலவித நாம ரூபங்களை எடுத்துக்கொண்டது. அவ்யக்தமாக இருந்தது பல நாம ரூப பேதாத்மகமான — வியக்தமான — ஜகத்தாக பரிணமித்தது. பரிணமித்து பிராணிகளின் இதய குகையில் பிரகாசிக்கின்றது. இந்த பாரமார்த்திக ஸத்யமான பரம்பொருள் மூர்த்த வஸ்துக்களாயும் (உருவுடையவை) அமூர்த்தவஸ்துக்களாயும் (அருவங்கள்) குறிப்பிடக்கூடிய பொருள்களாகவும், குறிப்பிடமுடியாத பொருள்களாகவும், ஆசிரய வஸ்துக்களாகவும், ஆசிரயமில்லாத வஸ்துக்களாவும், புத்தியுள்ளவைகளாகவும், இல்லாதவைகளாகவும், வியவஹார ஸம்பந்தமான ஸத்ய வஸ்துக்களாயும், வியவஹார ஸம்பந்தத்தில் பொய்யான பொருள்களாயும், மற்றுமுள்ள யாவையுமாகிவிட்டது. இதுவே ஸத்வஸ்து. இதன் விஷயத்தில் ஒரு மந்திரமும் உள்ளது.

த்ரிசங்கு:— குருநாதரே, ஜகத் சிருஷ்டியையும், பிரம்மமே எல்லாமாக ஆனதையும் புரிந்து கொண்டோம். தொடர்ந்து உபதேசிக்க வேண்டுகின்றேன்.

போதாயனர்:— ஸ்வாமீ! தன்யனானேன். ஆகாசாதிகளுக்குக் காரணமான அந்த பிரம்மம், காரிய வர்க்கங்களை சிருஷ்டித்து, புத்தி ரூபமாகிற குகையில், காண்பவன் போலவும், கேட்பவன் போலவும் மற்றும் சகலவிதமாகவும் தோற்றமளிப்பதையும் அறிந்தோம் ஆனால் ஒரு ஸந்தேகம்.

வருணர்:— அதுவென்ன! வத்ஸா! உடன் கேள்

போதாயனர்:— ஐயனே! வியவஹார ஸத்யம் வியவஹாரத்தில் பொய், பாரமார்த்திக ஸத்தியம் என்று சொன்னீர்களே! அது நன்றாகப் புரியவில்லை, விபரமாகச் சொல்லவேண்டும்.

வருணர் :— பாரமார்த்திக ஸத்யம் என்பதுதான் பிரம்மம். எப்போதும் எங்கும் உண்மையாக இருக்கும். ரஜ்ஜு ஸர்ப்பம் (கயிற்றில் தோன்றும் பாம்பு) சுக்தி ரஜதம் (சிப்பியில் தோன்றும் வெள்ளி) இது முதலானவை பொய். வியவஹாரத்திலும் பொய் தான். அவைகளைக் காட்டிலும் வேறான உண்மைப் பாம்பும் உண்மை வெள்ளியும் இருக்கின்றனவல்லவா அவைகளும் ஒருவிதத்தில் பொய் தான் ஆனாலும் வியாவஹாரிக ஸத்தியம்.

வைகானஸர் :— ஐயனே! மந்திரங்களைக்கூறி பொருள் கூற வேண்டுகிறேன்.

வருணர் :—

असद्वा इदमग्र आसीत्। ततो वै सदजायत। तदात्मानं स्वयमकुरुत। तस्मात्तत्सुकृतमुच्यत इति। यद्वै तत्सुकृतम्। रसो वै सः। रसं ह्येवायं लब्ध्वानन्दी भवति। को ह्येवान्यात्कः प्राण्यात्। यदेष आकाश आनन्दो न स्यात्। एष ह्येवानन्दयाति। यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते। अथ सोऽभयं गतो भवति। यदा ह्येवैष एतस्मिन्नुदरमन्तरं कुरुते। अथ तस्य भयं भवति। तत्त्वेव भयं विदुषोऽमन्वानस्य। तदप्येष श्लोको भवति।

ஸிருஷ்டிக்கு முன் ஆதியில் இப்பிரபஞ்சமெல்லாம் அஸத்தாக – நாமரூப வேற்றுமையற்றதாக – பிரம்மமாக இருந்தது. அந்தப்ரஹ்மத் திலிருந்து ஸத்தான – நாமரூபவேற்றுமையுள்ள – பிரபஞ்சம் உண்டா யிற்று. அந்த அஸத்தான ப்ரஹ்மம் தானாகவேதன்னை பலவாகச் செய்து கொண்டது. ஆகையினால் அது ஸுகிருதம் என்று கூறப்படும். ஸுகிருதமென்றால் ஸ்வயம் கர்த்தா எல்லாமாக ஆகியுள்ள ப்ரஹ்மமே புண்யரூபமாக இருந்து நமக்குப் பலனைத் தருகிறது. அதனால்தான் புண்யத்திற்கும் ஸுகிருதம் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. நித்ய மாயும் சேதனனாயுமுள்ள ஜகத்காரணப் பொருள் ஒன்று இருப்பதால் தான் ஸுகிருதம் பலனைத் தருகிறது. எது ஸ்வயம்கர்த்தாவோ அதுவே ஆனந்த ரஸம். அந்த ரஸத்தை அடைந்தவன் ஆனந்த முள்ளவனாகிறான். அது அவனுடைய இதய ஆகாசத்தில் ஆனந்த ரூபமாக பிரகாசிக்கிறது. போக ஸாதனப் பொருள் ஒன்றுமில்லா விடினும் ஞானிகள் இருந்த நிலையிலேயே ஆனந்தமாயிருப்பதற்குக் காரணம் அவர்கள் மனதில் குடிகொண்ட பிரஹ்மம் ஆநந்தரஸம் என்பதுதான். மேலும் அது இல்லாமலிருந்தால் எப்படி பிராண

பான வாயுக்களின் சேஷ்டை இயங்கும்? சரீரத்தில் அவயவங்கள் செயல்படுவதே அவனிருப்பதால்தான். அதுவே உலகத்திற்கு எல்லா ஸுகத்தையும் கொடுக்கிறது. எப்போது ஒரு ஸாதகன், இத்தகைய உருவும் உடலும் குறியும் இடமும் மாறுபாடும் இல்லாத பரம்பொருளில் நிலைபெறுகிருனே அவன் பயமற்ற நிலையை எய்து கிருன். இப்பரம்பொருளில் சற்றேனும் பேதத்தைக் காண்பானுயின் அவனுக்கு பயமுண்டு. தான் வேறு ஆத்மா வேறு என்ற பேத புத்தி உண்டானதும் அங்கே பயம் உடனே தோன்றுகிறது. வித்துவானுக இருந்தபோதிலும் ஐக்யத்தைப் பாராமல் வேருகப் பார்ப்பவனுக்கு பயத்துக்குக் காரணமாயிருப்பதும் பிரம்மமேயாகும். அதைப்பற்றி பின்வரும் மந்திரமும் உள்ளது.

த்ரிசங்கு :— ஸத்குருவே, மந்திரத்தையும் பொருளையும் கூறுங்கள்.

வருணர் :—

भीषास्माद्वातः पवते । भीषोदेति सूर्यः । भीषास्मादग्निश्चेन्द्रश्च । मृत्युर्धावति पञ्चम इति ।

*பீஷாzஸ்மாத் வாத: பவதே 1 பீஷோதேதி ஸூர்ய: 1 பீஷாzஸ்மாதக்நிச்சேந்த்ரச்ச 1 ம்ருத்யுர் தாவதி பஞ்சம இதி 1*

இந்த பிரம்மத்தினிடம் பயத்தினுல் காற்று வீசுகிறது. பயத்தினுலேயே சூரியன் உதிக்கின்றுன். அக்கினியும் இந்திரனும் அவ்விதமே பயந்து தம் தம் தொழில்களைச் செய்கின்றனர். ஐந்தாவதான் யமனும் பயத்தினுலேயே ஓடுகிருன். எல்லாவற்றிற்கும் காரணம் பிரம்மமே. நியந்தாவும் பிரம்மமே. வாயு, சூரியன் முதலியவர்கள் ஸ்வயம் ஈசுவரர்களாகவே இருந்தாலும் ஒரு பயத்தால் ஏவப்பட்டு தம்தம் வினைகளை – பணிகளை வழுவாமல் – காலம் தாழ்த்தாமல் புரிகின்றுர்கள். அப்பயத்துக்குக் காரணம் பிரம்மமே யாகும். அவனே யஜமானன்.

த்ரிசங்கு :— குருநாதரே அனுப்பிரச்னங்களுக்கு விவரமாக விடை கூறவேண்டுகிறேன்.

வருணர் :— எங்கும் நிறைந்திருக்கும் — எல்லாமாயிருக்கும் பிரம்மம். அதுவே ஆனந்தமான பரம்பொருள். ஸ்வயம்கர்த்தா. ஸுக்ருதமும்கூட. அதுவே ரஸம். உயிருடனிருக்கும்போதும் அதற்குப்பின்னும் ஒவ்வொருவனும் ஒவ்வொருகணமும் அதை அடைந்தவனுகவேயிருக்கிருன். ஒவ்வொரு மூச்சிலும் ஒவ்வொரு செயலிலும், ஒவ்வொரு எண்ணத்திலும் ஒவ்வொரு வசனத்திலும்

குடிகொண்டிருக்கிறது இந்த ஆனந்த ரஸம். அதில்லாவிட்டால் யார் எதைத்தான் செய்யமுடியும்? அவித்துவானுக்கும் வித்வானுக்கும் பிரம்மம் ஸமம். சரீரத்தை விட்டபின் அவித்வானும் அடைகிறான் அவன் சேரவில்லையோ என்ற சந்தேகம் வேண்டாம். வித்துவானும் அடைகின்றான். வித்தியாசமென்னவென்றால் வித்துவான் இதை அறிகிறான். அவித்துவான் அறிவதில்லை. சரீரத்தை விட்டபின் என்றால் இறப்பு என்றர்த்தமில்லை. சரீரசம்பந்தமான காரியங்களை — ஸம்ஸார விஷயங்களை துறந்தபின் — விட்டபின் என்றே பொருள் கொள்ளவேண்டும். அதாவது ஜீவன் முக்தி நிலை.

போதாயனர் :— அக்ஞானி அறிவதில்லை. ஞானி அறிகின்றான் என்று கூறுகிறீர்கள். அடையும் ஆனந்தம் ஒன்றே என்று தானே கூறுகிறீர்கள் ஸ்வாமீ!

வருணர் :— ஆமாம்! குழந்தாய்!

போதாயனர் :— அங்ஙனமாயின் பஞ்ச பூதங்கள் மற்றும் தேவர்கள் அச்சமடைகின்றனர் என்று சொன்னீர்களே அதன் தாத்பர்யம் என்னவோ? தேவர்கள் ஞானிகள்தானே?

வருணர் :— குழந்தாய்! தேவர்கள் சிறந்த அறிவுள்ளவர்கள் தான். ஆனாலும் எப்போது தனக்கும் பிரம்மத்துக்கும் பேதத்தைப் பார்ப்பதில்லையோ அப்போதுதான் அவர்களுக்கும் அபய பிரதிஷ்டை என்ற நிலை ஸித்திக்கிறது. ஸகல சாஸ்திர பாரங்கதனாக இருந்தாலும் – பரமாத்ம வஸ்துவிடத்து ஒரு சிறிதேனும் பேதம் கற்பித்தால் அவன் முக்தி நிலையை அடையமுடியாது. ஞானிகளுக்கு எல்லா பயங்களையும் போக்குவது பிரம்மமே. அதுவே அவித்துவானுக்கும் பேதபுத்தியுள்ள வித்துவானுக்கும் பயத்தை விளைவிக்கிறது. பேதத்தைக் காணும் வரை பயத்தைக் காண்பான். பயத்தைக் காணும்வரை பிரம்மத்தை அடையாமல் வித்துவானும் எட்டித்தான் நிற்பான்.

வைகானஸர் :— ஸர்வகாரணனும், எங்கும் நிறைந்து பிரகாசிப்பவனும், பயப்படுத்துவோனும் பயத்தைப் போக்குபவனும், பயத்துக்குக் காரணமானவனும் எல்லாம் பரமாத்மாவே என்று அறிந்தோம்.

வருணர் :— வத்ஸர்களே! அபேதத்தில் அபயம், அபயத்தில் ஆனந்தம். அதுவே ரஸம். இதுவே ரத்ன சுருக்கமான உபதேசம். இந்த ஆனந்தத்தின் அளவுபற்றி நாளை கூறுகிறேன். போவோம் வாருங்கள்.

( எல்லோரும் எழுந்திருக்க திரை விழுகிறது. )

அங்கம் 3, காட்சி 4 முற்றும்

# அத்வைத சாஸ்திரத்தின்படி பக்தியின் ஸ்வரூபம்

M. K. வெங்கடராம அய்யர், M. A.

உபாஸனையை எந்த ரீதியில் செய்தாலும் அது ப்ரம்மத்திற்குத் தான் உரியது என்பதை மறக்கவே கூடாது. ப்ரதீகத்தில் ப்ரம்ம புத்தியை வைக்கவேணும் என்று சொல்லுவது அதை ஞாபகப் படுத்துவதற்காகத்தான். "ஓம்" என்னும் ப்ரணவ மந்த்ரம் ப்ரம்மத் திற்கு மிக்க ஸமீபமான ப்ரதீகம் என்று ஸ்ரீமத் ஆசார்யர் அபிப் பிராயம் தெரிவித்திருக்கிறார்.[1] தான் எழுதியிருக்கும் ஒவ்வொரு ஸ்தோத்திரத்திலும் இந்த உண்மையை ஞாபகப்படுத்துகிறார். "ஸ்ரீ ராம புஜங்க ஸ்தோத்திர" த்தை

विशुद्धं परं सच्चिदानन्दरूपं गुणाधारमाधारहीनं वरेण्यं ।

விசுத்தம் பரம் ஸச்சிதானந்த ரூபம்
குணாதார மாதார ஹீனம் வரேண்யம்

என்றும் "ஸ்ரீ விஷ்ணு புஜங்க ஸ்தோத்திர" த்தை

चिदंशं विभुं निर्मलं निर्विकल्पं निरीहं निराकारं ओंकारगम्यम् ।
गुणातीतमव्यक्तमेकं तुरीयं परं ब्रह्म यं वेद तस्मै नमस्ते ॥

சிதம்சம் விபும் நிர்மலம் நிர்விகல்பம்
நிரீஹம் நிராகாரம் ஓம்காரகம்யம் 1
குணாதீதம் அவ்யக்தம் ஏகம் துரீயம்
பரம் ப்ரம்ம யம் வேத தஸ்மை நமஸ்தே 11

என்றும், "கோவிந்தாஷ்டக" த்தை

सत्यं ज्ञानमनन्तं नित्यमनाकाशं परमाकाशम्

ஸத்யம் ஞானம் அனந்தம் நித்யம் அனாகாசம் பரமாகாசம்

என்றும் துவக்கியிருப்பதை முக்கியமாக கவனிக்கவேணும். "தச சுலோகி" என்னும் சிவஸ்துதியில் ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் साम्बे परब्रह्मणि (ஸாம்பே பரப்ரம்மணி) என்று காணப்படுகிறது. "தேவி ஸரஸ்வதியுமல்ல, லக்ஷ்மியுமல்ல, பார்வதியு மல்ல, இவர்கள் மூவருக்கும் மேல்பட்ட அனிர்வாச்யமான நான்கா

1 नेदिष्ठं ह्यालम्बनं ओंकारो ब्रह्मणः । (प्रश्न. भा. ५-२)
ओमित्येतदक्षरम् परमात्मनो अभिधानं नेदिष्ठम् । (छा. भा १-१)

வது தத்வம், ஸாக்ஷாத் பரப்ரம்மத்தின் உபாதியான மஹா மாயை" என்று ஸௌந்தர்ய லஹரியிலும் (சு. 97) "உன்னை சிலர் ஸரஸ்வதீ என்றும், வேறு சிலர் லக்ஷ்மீ என்றும், இன்னும் சிலர் கௌரீ என்றும் அழைப்பார்கள்; ஆனால் அத்வைதமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபம்தான் நீ என்று ஞானிகள் சொல்லுவார்கள்" என்று த்ரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தோத்திரத்திலும் (சு. 46) எழுதியிருப்பது ஆழ்ந்து சிந்தனை செய்யவேண்டிய விஷயம்.

ஆறு தேவதைகளைக் குறிப்பிட்டு அவர்களில் ஏதாவது ஒருவரை அவரவர்களுடைய ருசியையனுஸரித்து இஷ்ட தேவதையாக ஸ்வீகரித்து உபாஸனை செய்யலாம் என்பதுதான் ஸ்ரீ ஆசார்ய பாதாளின் அபிப்ராயம் என்பதை ஏற்கனவே சொன்னோம். நாமரூபம் இல்லாத நிர்குண ப்ரம்மத்தை உபாஸிப்பதற்கு உதவும் பொருட்டு அதற்கு நாம ரூபங்கள் கல்பிக்கப்பட்டுள்ளன. ஆதலால் உள்ளது ஒரே வஸ்துதான். அது ஒன்றே பல தெய்வங்களாகத் தோற்றம் அளிக்கிறது என்னும் உண்மையை மறக்கலாகாது. ருக்வேத மந்த்ரம் "ஸத் என்னும் ஒரே வஸ்துவை இந்த்ரன், மித்ரன், வருணன் அக்னி, என்னும் பல நாம ரூபங்களுடன் அந்தணர்கள் வ்யவஹரிக்கிறார்கள்" என்று கூறுகிறது. அதே கருத்தை இன்னும் சிறிது விளக்கத்துடன் "உள்ள ஒரே வஸ்துவை மனிதர்கள் தத்தம் புத்தி பேதத்தையனுஸரித்து ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், அக்னி, ஸூர்யன், சந்த்ரன், இந்திரன், வாயு, என்னும் பல நாம ரூபங்களால் வர்ணிக்கிறார்கள்" என்று ஸ்ரீ பகவத் பாதர் "ஹரி ஸ்துதி" யில் (சு. 18) எழுதியிருக்கிறார். எல்லா தைவங்களும் ப்ரம்மத்தின் தோற்றங்களாயிருந்தாலும் அவரவர்களுடைய ருசியையனுஸரித்து ஏதாவது ஒரு மூர்த்தியை இஷ்டதேவதையாக ஸ்வீகரிக்கலாம் என்று சொல்லியிருப்பதிலிருந்து வேறு தேவதைகளிடத்தில் பேதபுத்தியோ, வெறுப்போ, துவேஷமோ ஏற்படுவதற்கு சிறிதும் அவர் இடம் கொடுக்கவில்லை. "[1]ஜகத்துக்கெல்லாம் அதிபதியாகிய மஹேசுவரனுக்கும் ஜகத்தில் அந்தர்யாமியாக இருக்கும் ஜனார்த்தனனுக்கும் அடிப்படையில் யாதொரு வித்யாஸமும் இல்லை. இருந்தபோதிலும் என் புத்திக்கு சந்த்ரசூடனிடத்தில் அதிகப்ரவேசம்" என்று ஸ்ரீ அப்பைய தீக்ஷிதரவர்கள் சொல்லியிருப்பதுதான் இஷ்ட தேவதை என்னும் கொள்கைக்கு சரியான விளக்கம். "One can have preferences, but no exclusions" என்று ஆங்கிலத்தில் இந்த உண்மையை விளக்கியிருக்கிறார் மார்லி

1 महेश्वरे वा जगतामधीश्वरे जनार्दने वा जगदन्तरात्मनि ।
न वस्तुभेदप्रतिपत्तिरस्ति मे तथापि भक्तिस्तरुणेन्दुशेखरे ।

(Lord Morley) என்னும் பிரபு. "ஹரிக்கும் ஹரனுக்கும் வித்யாஸத்தைக் காணுத பக்தி மாருமலும் சாசுவதமாகவும் எனக்கு ஏற்படட்டும்" என்று ஸ்ரீமத் ஆசார்யர் [1]கங்காஷ்டகத்தில் (சு. 8) விண்ணப்பம் செய்துகொள்கிருர். விஷ்ணு பூஜை செய்யும்போது சிவ ஸஹஸ்ர நாமத்தைச் சொல்லி அர்ச்சனை செய்யலாம், சிவனுக்கு பூஜை செய்யும்போது விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைச் சொல்லி அர்சசனை செய்யலாம் என்று ஸ்ரீ சந்த்ரசேகரபாரதீ மஹாஸ்வாமிகள் சொல்வது வழக்கம்.

ஆகவே அத்வைதத்தில் தோய்ந்த பக்தி விசாலமான மனப்பான்மையுள்ளதாக இருக்கும். மத துவேஷத்திற்கு அது சிறிதும் இடம் கொடுக்காது. எந்த மதத்தை அனுஷ்டித்தாலும் சரி எந்த தேவதையை உபாஸனை செய்தாலும் சரி, இறுதியாக அடையப்படும் நிலையில் யாதொரு பேதமும் இருக்காது. ஆகவே மனிதர்கள் செல்லும் பாதைகள் வெவ்வேருக இருப்பதால் ஒன்றும் கேடு ஏற்பட்டு விடாது. அதைப்பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை. யாருடைய புத்தியையும் கலக்கவேண்டியதில்லை. யாருடனும் விவாதம் செய்யக் காரணமே இல்லை. ஸர்வக்ஞரான ஈசுவரன் எல்லாரையும் அவரவர்களுக்குத் தகுந்த மதத்தில் அமைத்திருக்கிருர். யார் யார் எந்த எந்த வழியில் போனுல் முன்னேறுவார்களோ அந்த அந்த வழியில் அவரவர்களை ஈசுவரன் வைத்திருக்கிருர் ஆகவே ஏதாவது ஒரு மதம் தான் எல்லாவற்றையும் விட உயர்ந்தது, அதைக் கைப்பிடித்தால்தான் நல்ல கதியை யடையலாம் என்று பிடிவாதம் செய்வதற்கு அத்வைதத்தில் திகழ்ந்த பக்தி சிறிதும் ஊக்கம் அளிக்காது அத்வைத சாஸ்திரத்திற்கு வேறு எந்த சாஸ்திரத்திடத்திலும் ஸஹிக்காத் தன்மையோ, வெறுப்போ, துவேஷமோ கிடையாது. ஸோபானக்ரமத்தில் எல்லா மதங்களுக்கும், எல்லா சாஸ்திரங்களுக்கும், இடம் இருக்கிறது என்பதே அதன் தீர்மானம். அதிகாரி பேதத்தை யனுஸரித்து வெவ்வேறு மதங்களும், சாஸ்திரங்களும் ஏற்பட்டிருக்கின்றன என்பது அதன் அபிப்ராயம்.

மத ஸம்பந்தமான சண்டைகளும் பூசல்களும் ஏற்படுவதற்குக் காரணம் "நான் உபாஸனை செய்யும் தைவம் தான் உத்தமமானது, மற்றவைகள் எல்லாம் நிக்ருஷ்டமானவை" என்று எண்ணும் சிறிய மனப்பான்மைதான். நாமரூபமில்லாத ப்ரம்மத்திற்கு ஏற்பட்டிருக்கும் நாம ரூபங்கள் எல்லாம் கல்பிதம் என்னும் முக்கியமான

1 भूयाद्भक्तिरविच्युता हरिहराद्वैतात्मिका शाश्वती ।

ஷியத்தை மறந்து ப்ரம்மத்தை சிவனுடனோ, விஷ்ணுவுடனோ ஐக்யம் (identify) செய்வதால் ஏற்படுகிறது அனர்த்தம். சிவ பக்தர்கள் அப்பொழுது வீர சைவர்களாகவும், விஷ்ணு பக்தர்கள் வீர வைஷ்ணவர்களாகவும் மாறி விடுகிறார்கள். உடனே வீர சைவர்களுக்கு விஷ்ணு துவேஷமும் வீர வைஷ்ணவர்களுக்கு சிவ துவேஷமும் ஏற்படுகிறது. உள்ளது ஒரே தைவம், அது சிவரூபமாகத்தான் இருக்கிறது, அல்லது விஷ்ணுரூபமாகத்தான் இருக்கிறது, அல்லது ஏசுநாதராக அல்லது அல்லாவாகத்தான் விளங்குகிறது என்று ஆக்ரஹத்துடன் பேசும் கொள்கைக்கு 'monotheism' என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். அத்தகைய நம்பிக்கையுள்ளவர்கள் வேறு மதஸ்தர்களை எந்த விதத்திலாவது தங்கள் மதத்திற்கு வரும்படியாகச் செய்வதற்கு பிரயத்னம் செய்வார்கள். அவசியமானால் பலாத்காரத்தையும் கையாளுவார்கள். தங்கள் மதம்தான் உயர்ந்தது, தாங்கள் உபாஸனை செய்யும் தைவம்தான் மேலானது என்று அவர்கள் நம்புவதால்தான் மத மாற்றுதலுக்கு வேண்டிய ஸர்வ பிரயத்னங்களையும் செய்கிறார்கள். எந்த நாம ரூபமும் கல்பிதம் தான், ஆகவே எதையும் ஸர்வோத்க்ருஷ்டம் என்று வாதிப்பதற்கு சிறிதும் நியாயமில்லை என்ற விவேகம் ஏற்பட்டால் ஒரு நாளும் மதங்களுக்குள் சண்டையே ஏற்படாது. ஜனங்கள் வெவ்வேறு மதங்களைப் பின் பற்றினாலும் அவர்களுக்குள் சண்டை பூசல் இல்லாமல் ஸஹ வாழ்வு வாழவேண்டுமானால் அத்வைத சாஸ்திரம்தான் அதற்கு உகந்த சூழ் நிலையை உண்டு பண்ணும். அத்வைதசாஸ்திரத்தில் ஆழ்ந்த நம்பிக்கையுள்ளவர்கள் இதர மதஸ்தர்களை நிந்திக்கமாட்டார்கள் என்பது மட்டுமல்ல; இதர மதங்களிடத்தில் மரியாதையுடனும் கௌரவபுத்தியுடனும் நடந்து கொள்வார்கள்.

எந்த தைவத்தையும் ப்ரம்ம புத்தியுடன் உபாஸனை செய்வதால் அது ஸச்சிதானந்த ஸ்வரூபி என்ற எண்ணம் ஏற்படுவதுடன் அதை அடைவதுதான் உத்தமமான லாபம், அத்துடன் ஐக்கியமாவதுதான் பரம புருஷார்த்தம், அந்த ஸாயுஜ்யத்தால் ஏற்படும் ஆனந்தத்திற்கு உயர்ந்ததாகவோ ஸமமாகவோ கருதக்கூடிய வேறு லாபம் ஒன்றும் கிடையாது என்ற நிச்சயமான புத்தி உண்டாகும். ஸாதாரணமாக மனிதர்கள் கோரும் தனதான்யங்கள், புத்திர பௌத்திரர்கள், அரோக த்ருடசரீரம், நீண்ட ஆயுள், ஸர்வாதிகாரம் போன்றவை எல்லாம் நச்வரமாகவும் துச்சமாகவும் தோன்றும், மூன்றுலோகத்தின் ஆதிபத்யமும் ஆத்ம லாபத்திற்கு ஸமமாகக்

கருதப்படமாட்டாது. ஸ்வர்க்கலோகத்தின் போகங்களும் மனதைக் கவரா. "புத்ரர்கள், ஐசுவரியம் முதலிய எல்லாவற்றையும்விட ஆத்மலாபம், உயர்ந்தது" என்று பிருஹதாரண்யக உபநிஷத்[1] கூறுகிறது [2]ஸ்ரீமத் பகவத் கீதையிலும் "ஆத்மலாபத்தை யடைந்தவர்கள் வேறு எந்த லாபத்தையும் அதைவிட அதிகம் என்று எண்ணமாட்டார்கள்." என்று பகவான் உபதேசித்திருக்கிறார். ப்ரம்ம புத்தியுடன் இஷ்டதேவதை யிடத்தில் பக்தி செய்வதுதான் உத்தமமான பக்தி. அதுதான் நிர்வ்யாஜமான பக்தி.

இதர லாபங்களையுத்தேசித்து பகவானிடத்தில் செய்யப்படும் பக்தி ஸவ்யாஜமானது அது உண்மையான பக்தியாகாது. அனிஷ்டத்தைப் போக்குவதற்கோ, இஷ்டத்தையடைவதற்கோ பகவானிடத்தில் பக்தி செய்தால் அது வ்யாபாரத்திற்கு ஸமம். "எனக்கு வேண்டியவைகளை பகவான் கொடுத்தால் நான் அவருக்கு அபிஷேகம் செய்து வைக்கிறேன்." இது ஒரு வ்யாபாரியிடம் பேரம் பேசுவதுபோல்தான் இருக்கிறது. நாம் அடைய விரும்பும் வஸ்துக்களைப் பெறுவதற்கு பகவானை ஒரு கருவியாகத்தான் எண்ணுகிறோம். அவர் மூலமாக ஒரு காரியம் ஆகவேணும் என்பதற்காகத்தான் பக்தியேயல்லாது பகவானே தான் உத்தமமான லாபம் என்பதற்காக அல்ல. நாம் அடைய விரும்பும் வஸ்துக்களை வேறு விதமாக அடைய வழியிருந்தால் பகவானை நினைக்கவேமாட்டோம். அல்லது பகவத் பக்தியின் மூலம்தான் அதை அடைய முடியும் என்று ஏற்பட்டாலும் அதை அடையும் வரையில்தான் பக்தி செய்வோம். அடைந்தபிறகு பகவானை மறந்துவிடுவோம். பக்தி செய்தும் நம்முடைய விருப்பங்கள் நிறைவேறவில்லையென்றால் பகவானை தூஷிப்பதுடன் நிற்காமல் நாஸ்திக்யமும் நிரீசுவரவாதமும்பேசத் துடங்குவோம். ஸாதாரணமாக மனிதர்கள் செய்யும் பக்தி இத்தகையதுதான்.

பகவானை அடைவதுதான் ஸர்வோத்க்ருஷ்டமான லாபம். த்ரிகரணசுத்தியுடன் உடல், மனம், ஆவி எல்லாவற்றையும் நிச்சேஷமாக அவருக்கு அர்ப்பணம் செய்யவேணும். இந்த மனோ பாவத்துடன் பக்தி செய்வது ஏகாந்த பக்தி அல்லது அனந்ய பக்தி எனப்படுகிறது. இந்த ரீதியில்தான் வ்ரஜ ஸுந்தரிகளான கோபியர்கள் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பக்தி செலுத்தினார்கள். "புருஷன், குழந்தைகள் ஸஹோதர ஸஹோதரிகள், இதர பந்துக்கள் எல்லோரையும் உதறித்தள்ளிவிட்டு உன் ஸமீபத்திற்கு நாங்கள்

---

1. तदेतत्प्रेयः पुत्रात्प्रेयो वित्तात्प्रेयोऽन्यस्मात्सर्वस्मात् । (१-४-८)
2. यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः । (६-२२)

வந்திருக்கிறோம்." [1] என்று அவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் விண்ணப்பம் செய்துகொள்கிறார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் அந்த இடத்திலிருந்து மறைந்தவுடன் அவர்கள் சொல்லொணுத்துயரத்தையடைகிறார்கள். "எப்பொழுதும் அவரிடத்தில் மனம் ஈடுபட்டு அவரைப் பற்றியே பேச்சு, அவருடைய குணங்களையே பாடுவது, அவருடைய லீலைகளையே நடிப்பதுமாக இருந்துகொண்டு தங்களுடைய வீட்டு நினைவே இல்லாமல் போய்விட்டார்கள்" [2] அவர்களுடைய பக்தியை மெச்சி "இதற்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்" என்று பகவான் கூறுகிறார் [3]

நிர்வ்யாஜமான க்ருஷ்ணபக்தியில் ப்ரம்மானுபவம் இருப்பதைக் கண்டுதான் ப்ரஸித்தமான அத்வைதிகள்கூட அதில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் 'ப்ரபோதஸுதாகர' த்திலும் 'க்ருஷ்ணாஷ்டக' த்திலும், 'கங்காஷ்டக' த்திலும் க்ருஷ்ணபக்தியில் தனக்குள்ள ஈடுபாட்டை ஸ்பஷ்டமாக விளக்கியிருக்கிறார். ஸ்ரீ க்ருஷ்ணனை பரப்ரம்மமாக தான் எண்ணுகிறார் என்பதை 'க்ருஷ்ணாஷ்டகத்தில் மிகத் தெளிவாக சொல்லுகிறார் அவர்தான் ஜகத்தின் அந்தர்யாமி, அவருடைய பலத்தால்தான் தேவாஸுர யுத்தத்தில் தேவர்களுக்கு ஜயம் கிடைத்தது, அவருடைய தத்வத்தை அறிந்தால்தான் ஜனனமரணத்திலிருந்து விமோசனம் அடையலாம் என்று சொல்லியிருக்கிறார். மதுஸூதன ஸரஸ்வதி என்னும் ப்ரஸித்தமான அத்வைத சாஸ்திர நிபுணர் "நிர்குண ப்ரம்மத்தை உபாஸனை செய்கிறவர்கள் அவசியம் செய்யட்டும். அவர்களுக்கு நான் ஆசிகூறுகிறேன். என்னைப்பற்றினமட்டில் யமுனா நதிக்கரையில் ஸஞ்சாரம் செய்துகொண்டிருந்த நீலமேக ச்யாமளனை க்ருஷ்ண பரமாத்மா என் கண்கள் முன்பு எப்பொழுதும் இருந்து தர்சனம் கொடுத்தால் அதுவே போதுமானது" என்றும் "க்ருஷ்ண தத்வத்திற்கு மேல்பட்ட தத்வத்தை நான் அறியேன்" என்றும் கூறியிருக்கிறார். நாராயணதீர்த்தர் என்னும் யதிச்ரேஷ்டர் க்ருஷ்ண பக்தியில் ஈடுபட்டு தன் அனுபவத்தை 'க்ருஷ்ண லீலாதரங்கம்' என்னும் உத்தமமான க்ரந்தத்தில் வெளியிட்டிருக்கிறார். "ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் கிருஷ்ணனைப்பற்றி கீர்த்தனைகள் செய்திருப்பதும் கவனிக்கத்தக்கது. "அஞ்ஞானத்திலிருந்து பூர்ணமாக விடுபட்டு ஆத்ம நிஷ்டர்களாக இருக்கும் முனீச்வரர்கள்கூட ஹரியின் உத்தம மான குணங்களில் ஈடுபட்டு ஹரிபக்தி செய்கிறார்கள்" என்று ஸூதர் கூறுகிறார் [4] (தொடரும்)

1. பாகவதம் 10, 31, 18 ... 3. 10-32-22 4. 1-7-10

# உஜ்ஜயினியில் வியாஸ பூஜை

## I

சுமார் இருபத்தைந்து நூற்றுண்டுகளாக வளர்ந்து வரும் உஜ்ஜயினீ நகரின் சிறப்பு, புராணம், கல்வெட்டுகள், காவ்யம், வரலாறு இவைகளால் பிரகாசப் படுத்தப்பட்டிருக்கிறது.[1] தற்கால முள்ள நகரின் சமீபத்தில் பழைய நகரத்தின் சிதைந்துபோன சின்னங்கள் காணப்படுகின்றன. வணிகச் சிறப்பு, அயல்நாட்டுத் தொடர்பு, கலைப்பண்பு, செல்வப்பெருக்கு இவைகள் மூலம் வளம் பெற்று விளங்கி வந்திருக்கிறது இந்த நகரம். "விண்ணுலகத்தின் பொலிவு பெற்ற ஒரு பகுதியே இந்நகரம்" (दिवः कान्तिमत्खण्डमेकम्) (மேகதூதம் 1-30) என்கிருன் காளிதாஸன். உஜ்ஜயினீ என்ற சொல் குறிப்பிடும் "பெரும் வெற்றி" எது? திரிபுரங்களை எரித்து திரிபுராரி அடைந்த ஜயமே, என்கிறது "அவந்திகா கண்ட மாகாத்மியம்." மாளவ நாட்டின் ஒரு பகுதி அவந்தி. அதன் தலைநகரமும் அவந்தி எனப்படும். அவந்தியே உஜ்ஜயினீ. விசாலா, புஷ்பகரண்டினீ என்பவை இந்நகரின் மற்ற பெயர்கள்.

வடமொழி காவ்யங்களை ரஸித்தவர்களுக்கு உஜ்ஜயினியின் அரசன் ப்ரத்யோதனின் செல்வ குமாரி வாஸவதத்தையை உதயணன் மணந்த சுவையுள்ள கதை ஞாபகம் வரும். மௌரிய பேரரசின் முக்கிய மண்டலத்தின் தலைநகராக இருந்து வந்தது உஜ்ஜயினி. யுவராஜராக இருந்த காலத்தில் அசோகனே இங்கு மண்டலாதிபதியாக ஆட்சி செலுத்தினுன். இங்கு கி. மு. 56ல் தோற்றுவிக்கப்பட்ட ஸம்வத் (விக்ரமசக)த்தைப் பற்றியும் தோற்று வித்த விக்ரமாதித்தன் யார் என்பதைப்பற்றியும் ஆராய்ச்சியாளர் களின் இடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. அலெக் ஸாண்டிரியா நாட்டைச் சேர்ந்த டாலமி (Ptolemy) என்ற பூகோள சாஸ்திர அறிஞனின் (கி. பி. இரண்டாம் நூற்றுண்டு) குறிப்பிலும் நாஸிக் பண்டைய குகைக்கல்வெட்டிலும் உஜ்ஜயினீ இடம் பெற்றிருக் கிறது. குப்தர்களின் ஆட்சியிலும் உஜ்ஜயினி சிறப்புப்பெற்றிருந்தது. கி. பி. 9 முதல் 11வது நூற்றுண்டுவரை தாரா நகரில் ஆட்சி செலுத்திவந்த பரமார வம்சத்தினர் உஜ்ஜயினியின் சிறப்பையும் செல்வத்தையும் வளர்த்து வந்தார்கள். 1235ம் ஆண்டில் தில்லி சுல்தான் இல்டுட்மிஷ் (Iltutmish or Altamish) உஜ்ஜயினியைக்

---

1. Few cities perhaps can boast of a more continuous reputation, as it has been of great note from the earliest periods of Hindu tradition down to the present day. (Wilson)

கைப்பற்றி மகாகாலர் ஆலயத்தைத் தகர்த்தான். பிறகு சுமார் 500 ஆண்டுகளுக்கு இந்த நகரம் முஸ்லீம் ஆட்சியில் இருந்தது. 1750ல் சிந்தியா என்ற மகாராஷ்டிர அரச வம்சத்தினர் உஜ்ஜயினியைக் கைப்பற்றிச் சிலகாலம் அதை தலைநகராகவும் பாவித்து வந்தார்கள். பிறகு ராஜதானி குவாலியருக்கு மாற்றப்பட்டது.

II

நாம் கொண்டாடும் ஏழு மோக்ஷ புரிகளில் உஜ்ஜயினீ ஒன்றாகும். பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்கங்கள் நம் நாட்டில் கொண்டாடப்படுகின்றன. அவைகளில் ஒன்று உஜ்ஜயினியிலுள்ள மகாகாலேச்வர லிங்கமூர்த்தி. நம் நாட்டிலுள்ள ஐம்பத்தொன்று முக்கிய சக்தி பீடங்களில் ஒன்று இங்கு இருக்கிறது. இங்கு பிரவகிக்கும் சிப்ரா நதியும் புண்ய நதியே. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருதரம் குரு சிம்மராசியில் சஞ்சரிக்கும்போது இந்நதியில் லக்ஷக்கணக்கான மக்கள் தங்கள் பாபங்களைத் தொலைக்க நீராடுகிறார்கள். 'நிர்மலமான சிப்ரா நதியில் ஸ்நானம் செய்து மகாகாலரைப் பணியும் மனிதனுக்கு யம பயமே கிடையாது. இங்கு மரிக்கும் புழு, பூச்சிகள்கூட ருத்ரனை அண்டுகிறது' என்று கூறுகிறது 'அவந்திகா மாகாத்மியம்'

स्नानं कृत्वा नरो यस्तु महानद्यां हि दुर्लभम् ।
महाकालं नमस्कृत्य नरो मृत्युं न शोचयेत् ।
मृतः कीटः पतङ्गो वा रुद्रस्यानुचरो भवेत् ॥

தில்லி சுல்தானால் தகர்க்கப்பட்ட மகாகாலரின் ஆலயம் அடிக்கடி புதுப்பிக்கப்பட்டது. இப்போதுள்ள ஆலயம் 18ம் நூற்றாண்டில் ரனோஜி சிந்தியா மன்னரின் அமைச்சர் ராமச்சந்திர பாபாவால் நிர்மாணிக்கப்பட்டது. பாரதீய ஜ்யோதிஷ கணித நிபுணர்களின் கொள்கைப்படி மகாகாலேச்வர லிங்கமூர்த்தி இருக்கும் இடமே உஜ்ஜயினியின் மேல் செல்லும் உச்சிக்கோடு (Prime meridian passing through Ujjain). இந்த மூர்த்திக்கு மகாகாலர் என்ற திருநாமம் எவ்வளவு பொருத்தமானது! "ஸாது ஜனங்களுக்கு முக்தியை அளித்தும், பொதுவாக ஜனங்களுக்கு அகால மிருத்யு நேராமல் ரக்ஷித்தும் அவந்தி நகரில் காட்சியளிக்கும் தேவ தேவனை மகாகாலனை நமஸ்கரிக்கின்றேன்" என்று பாடியிருக்கிறார் பகவான் ஆதிசங்கரர்.

अवन्तिकायां विहितावतारं मुक्ति दानाय च सज्जनानाम् ।
अकालमृत्योः परिरक्षणार्थं वन्दे महाकालमहं सुरेशम् ॥

இந்த ஆலயத்தின் சபாமண்டபத்தில் நகரைக் காக்கும் அவந்திகா தேவி காட்சியளிக்கிறாள்.

ருத்ர தீர்த்தத்துக்கு அண்மையில் ஹரஸித்தி தேவியின் ஆலயமிருக்கிறது. இங்கு தேவியின் பிரதிமை இல்லை. முக்கிய பீடத்தின் மேல் ஸ்ரீயந்திரமே காணப்படுகிறது. அன்னபூர்ணாவின் மூர்த்தி ஒன்று இந்த ஆலயத்திலிருக்கிறது. கட் (கோட்டை) காளிகா தேவியை காளிதாஸன் உபாசித்தான் என்பது கர்ணபரம்பரை. மகா கணபதி, பஞ்சமுகி ஹநுமான், பைரவர் இவர்களின் ஆலயங்களும் பிரசித்திபெற்றவை.

தௌலத்ராவ் சிந்தியாவின் மகாராணி பைஜாபாய் 1833ல் கட்டின கோபால மந்திரத்தில் ராதாகிருஷ்ணமூர்த்தி பொலிவுடன் பக்தர்களை அனுக்கிரஹிக்கிறார்.

காளிதாஸன் மட்டுமல்ல பர்த்ருஹரியும் உஜ்ஜயினியில் வசித்து வந்திருக்கிறார். அவர் ஞாபகச்சின்னம் பர்த்ருஹரி குகை. இங்கு இருந்த சிவன் கோவில் சிதைந்துவிட்டது. சில பாகங்கள் புதுப்பிக்கப்பட்டிருக்கின்றன.

உஜ்ஜயினியில் பல வித்யா ஸ்தானங்கள் இருந்தன. இவைகளில் மிக பிராசீனமானது ஸாந்தீபினி முனியின் ஆச்ரமம். இங்குதான் பகவான் கிருஷ்ணனும், பலராமனும் ஸுதாமாவும் குருகுலவாஸம் செய்தார்கள். அந்த ஆச்ரமம் இருந்த இடத்தில் இப்போது நாம் பார்க்கும் ஆலயங்களில் கிருஷ்ணன், பலராமன் ஸுதாமா இவர்களின் மூர்த்திகள் நம்மை அனுக்கிரஹிக்கின்றன.

உஜ்ஜயினியின் கணிதசாலை (Astronomical observatory) முன்காலத்தில் உலக பிரசித்திபெற்றது. 1733ல் ஜயபூர் மன்னன் மகாராஜா ஜயசிம்மன் இதைப் புதுப்பித்தான். இங்கு நான்கு யந்திரங்கள் இருக்கின்றன. அவைகளின் உதவியால் கணிக்கப்படும் கிரஹ நக்ஷத்திர சாரங்களில் யாதொரு பிசகுமில்லாமல் தற்கால கணிதத்துக்கு ஒத்து வருகின்றன.

நகரத்திற்கு வடக்கில் சுமார் ஏழுமைல் தூரத்தில் சிப்ரா நதியின் மத்தியிலுள்ள திட்டில் பிரம்ம குண்டம் என்று முன் வழங்கி வந்த இடத்தில் மாளவ நாட்டை ஆண்டுவந்த கில்ஜி சுல்தான் நாசிர்ஷா சுமார் 1500ம் ஆண்டில் நிர்மாணம் செய்த அழகிய அரண்மனை ஒன்றிருக்கிறது. இதற்குப் பெயர் கலியதே (Kaliadeh) அரண்மனை. கோடைகாலத்திற்கு ரமணீயமான ஸ்தலம். குழாய்கள் மூலம்

நதியின் ஜலம் கொண்டுவரப்பட்டு சிறு-நீர்வீழ்ச்சிகள் மூலம் கட்டடம் குளிர்ந்திருக்கிறது. இங்கு செல்வதற்காகப் போடப்பட்டிருக்கும் பாலம் பழைய கோவில்களிலிருந்து எடுக்கப்பட்ட கற்களால் நிர்மாணிக்கப்பட்டது.

III

சிந்தியா வம்சத்தினரில் மிகவும் பிரக்யாதி பெற்றவன் மகத்ஜி சிந்தியா. இவன் 1792—1794 ஆண்டுகளில் புனாவுக்கு வந்து பேஷ்வாவுடன் ராஜிய விஷயங்களை ஆலோசித்து வந்தான். 1792-ல் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் III புனாவுக்கு விஜயம் செய்தார்கள். அவர்களை தரிசித்த மகத்ஜி பக்தியால் தூண்டப்பட்டு 1793—4-ல் பிப்பல்கட் என்ற கிராமத்தைக் காணிக்கையாக அர்ப்பணம் செய்தான்.

1842-ல் ஜகத்குரு ஸ்ரீ நரஸிம்ம பாரதீ ஸ்வாமிகள் VII, தார்வாட் வழியாக உத்தர தேசத்து யாத்திரையைத் துவக்கி சுமார் 1860 வரை வட இந்தியாவில் சஞ்சாரம் செய்தார்கள். கி. பி. 1850—1ல் (ஸம்வத் 1906) ஜயாஜிராவ் சிந்தியா ஜகத்குருவை தன் ராஜ்ஜியத்துக்கு அழைத்து உஜ்ஜயினீ, குவாலியர் முதலிய இடங்களில் அவர்களுக்குப் பணிவுடன் பலவிதத்தில் உபசரித்தான். அவர்களின் பரிவாரங்களுக்கு சகல சௌகரியங்களையும் செய்து கொடுத்து ஸ்ரீ சாரதா, சந்திரமௌளீச்வர, ரத்னகர்பஹேரம்ப பூஜைக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ. 500 காணிக்கையாக சமர்ப்பிப்பதாக விஞ்ஞாபனம் செய்துகொண்டான். மடங்கள் எல்லாவற்றிலும் சிருங்கேரி மடமே முக்கியமானது என்று சொல்லி, ஸ்ரீ ஜகத்குரு பாதங்களுக்கு காணிக்கைகள் ஸமர்ப்பித்தால் ராஜ்ஜியத்துக்குப் பலவிதமான நன்மைகள் ஏற்படும் என்றும் பிரகடனம் செய்தான். உஜ்ஜயினியை அடுத்த நகரமான இந்தூரிலும் துகோஜிராவ் ஹொல்கர் மன்னன் ஜகத்குருவை உபசரித்தான். அவன் அனுப்பிய கடிதத்தில் தன்னை ஜகத்குருவின் சரண கமலங்களில் மொய்க்கும் வண்டு

भ्रमरीभूतांतःकरण सच्छात्रांतर्गत तुकोजीरावहोलकर कृतवंदनतयः ।

என்று குறிப்பிட்டான். நாட்டிலுள்ள அவதூதர்கள் மற்ற சந்நியாசிகள், பதினெட்டு வர்ணத்தார்கள் எல்லோரும் ஜகத்குருவின் ஆக்ஞைகளை மீறக்கூடாது என்று உத்தரவிட்டான். அதற்குக் காரணம் ஜகத்குரு "அகில லோகோத்தாரகர்" "தர்மமே மூர்த்தீகரித்தவர்" என்று குறிப்பிட்டான். இது ஆச்சரியமான பண்பும் பக்தியும் அல்லவா! அவ்விதமே தேவாஸ் மன்னனும்

ஜகத்குருவை உபசரித்து மகிழ்ந்தான். அவன் கடிதத்தின் முகவரி "ஸ்ரீ மஹாஸ்ஸம்ஸ்தான ஸ்ரீ மஜ்ஜகத்குரு சங்கராசார்ய ஆதி பீட — சிருங்கேரி" என்று காண்கிறது.

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரஸிம்மபாரதிகள் கோல்ஹாபூர்வரைதான் விஜயம் செய்தார்கள். 1894-ல் சங்கேச்வர மடாதிபதி தங்களுக்கு விசேஷ மரியாதைகள் செய்யவேண்டுமென்று கோரினார். அப்போது குவாலியர் சிந்தியா ஆட்சி நிர்வாகசபை **(Council of Regency)** பிறப்பித்த உத்தரவில் சிருங்கேரி மடத்தின் பிராதான்யத்தை உத்தேசித்து அந்த மடத்துக்கே அக்ரபூஜை, முதல் காணிக்கை சமர்ப்பிப்பது, சங்கேச்வரம் முதலிய மடங்களுக்கு சிருங்கேரிக்குப்பின்தான் என்று கண்டிருக்கிறது. குவாலியர் அரச வம்சத்தைச் சேர்ந்தவர்கள் இன்றுவரை சிருங்கேரிக்குக் காணிக்கை செலுத்தி வருகிறார்கள்.

மாளவத்து அரசர்களின் சிரத்தை பக்திக்கு பொதுஜனங்கள் பக்தி குறைவாக இல்லை. 1859ல் குவாலியர், மந்தசோர், உஜ்ஜயினி முதலிய நகரங்களின் வாசிகள் தாங்கள் சிருங்கேரி மடத்தின் சிஷ்யர்களாதலால், தங்கள் காணிக்கைகளை அந்த மடத்துக்கே சமர்ப்பிப்பது என்று தீர்மானித்தனர். இவ்விஷயத்தைக்குறித்து தர்மசாஸனங்கள் எழுதி ஜகத்குரு பாதங்களில் சமர்ப்பித்தார்கள்.

19ம் நூற்றாண்டின் முன்பகுதியில் வடநாட்டில் போர்களும், பஞ்சமும், நாசவேலைகளும் நடந்துவந்தன. மராட்டியர், ஆங்கிலேயர், நிஜாம், சீக்கியர், ராஜபுதனர், இவர்கள் பரஸ்பரம் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். பல ராஜ்ஜியங்களை ஆங்கிலேயர் வசப்படுத்திக் கொண்டார்கள். 1857ல் விடுதலைப்போர் நடந்தது. மக்கள் பட்ட கஷ்டங்கள் சொல்லி முடியாதவை. மழையில்லாமல் வாடும் பயிர் போல் மக்களின் மனம் கருகியது. இக்காலத்தில் ஜகத்குரு ஸ்ரீ நரஸிம்ம பாரதிகளின் அருள் மழை நாட்டில் பொழிந்து மக்களுக்கு சற்று அமைதியைக் கொடுத்தது. நூறு ஆண்டுகளுக்குப் பின் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் தங்கள் பரமேஷ்டி குருவைப்போல் வடநாட்டில் யாத்திரை செய்கிறார்கள். இப்பவும் நாட்டில் பல துன்பங்களால் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். ஜகத்குருவின் கடாக்ஷத்தால் அவர்களுக்கு சுகம் ஏற்படும் என்பதில் ஐயமில்லை.

முன்னிருந்த அரசர்களின் ஆட்சி இப்போது மறைந்துவிட்டது. ஆனாலும் மத்யபிரதேச ராஜ்யபா ... ளும், மந்திரிகளும்,

அதிகாரிகளும், பக்தஜனங்களும் தலைநகரான போபாலிலும், இந்தூர் தேவாஸ் முதலிய இடங்களிலும் கோலாகலமாக நம் ஜகத்குருவை வரவேற்று உபசரித்திருக்கிறார்கள். உஜ்ஜயினியில் பிரவேசம் மறக்க முடியாத வைபவத்தோடு கூடியதாகவே இருந்தது. பல்லக்கு உத்ஸவம், பூர்ணகும்ப மரியாதை, வேத முழக்கம் இன்னம் எவ்வளவோ வைபவங்கள்! பக்தர்களின் உத்ஸாகம் திறந்துவிட்ட மடைபோல் பெருகி வருகிறது. ஜகத்குரு வசிப்பதும் சிந்தியாவின் மாளிகையில்தான்.

IV

காளிதாஸனுடைய 'மேக சந்தேச' காவ்யத்தில் யக்ஷன் ஒருவன் தன் மனைவிக்கு மேகத்தின் மூலம் தூது அனுப்புகிறான். மேகம் போகவேண்டிய பாதையை குறிப்பிடுகிறான். நேர் பாதையிலிருந்து விலகி உஜ்ஜயினீ செல்லவேண்டும் என்கிறான். "அங்கு கதிரவன் மறையும் வரை காத்திருந்தால் மகாகாலருக்கு நடக்கும் சந்தியாகால பூஜையை தரிசிக்கலாம். விசேஷ பலன் வேண்டுமானால் மேகம் இடிமுழக்கத்துடன் கர்ஜிக்கவேண்டும். அப்போது பூஜா சமயத்தில் மத்தளம் வாசித்துக் கைங்கர்யம் செய்ததாக ஆகும்" இவ்விதம் பூஜையில் கலந்துகொள்ளும்படி மேகத்துக்குச் சொல்லுகிறான்.

अप्यन्यस्मिञ्जलधर महाकालमासाद्य काले
स्थातव्यं ते नयनविषयं यावदत्येति भानुः ।
कुर्वन्सन्ध्याबलिपटहतां शूलिनः श्लाघनीया-
मामन्द्राणां फलमविकलं लप्स्यसे गर्जितानाम् ॥ (I-37)

இப்போது சாதுர்மாஸ்யகாலம். வர்ஷருது உஜ்ஜயினியில் கூடும் மேகம் மத்தள சப்தம்போல இடிமுழக்கம் செய்யும். மகா காலர் ஒரு ஜ்யோதிர் லிங்கம். மற்றொரு ஜ்யோதிர் லிங்கமான சந்திரமௌளீச்வர லிங்கமும் இப்போது அங்கு கூடியிருக்கிறது. திரிபுவன குருவாகிய சந்திர மௌளீச்வரருக்கு லோககுரு பூஜை செய்கிறார். இந்த வைபவத்தை நாம் தியானம் செய்தாலே அவிகலமான (அகண்டமான) பலன் (நன்மை) சித்திக்கும்.

— ஆசிரியர்

# பாடம் 16

## ஐந்தாம் வேற்றுமை

### ஆண்பால் சொற்கள்

| ஒருமை | பன்மை |
|---|---|
| **गजात्**-யானையிடமிருந்து | **गजेभ्यः**-யானைகளிடமிருந்து |
| **अश्वात्**-குதிரையிலிருந்து | **अश्वेभ्यः**-குதிரைகளிலிருந்து |
| **अजात्**-ஆட்டிலிருந்து | **अजेभ्यः**-ஆடுகளிடமிருந்து |
| **वृषभात्**-காளையிலிருந்து | **वृषभेभ्यः**-காளைகளிலிருந்து |
| **मयूरात्**-மயிலிடமிருந்து | **मयूरेभ्यः**-மயில்களிடமிருந்து |
| **पिकात्**-குயிலிடமிருந்து | **पिकेभ्यः**-குயில்களிடமிருந்து |
| **विहगात्**-பட்சியிடமிருந்து | **विहगेभ्यः**-பட்சிகளிடமிருந்து |
| **वृक्षात्**-மரத்திலிருந்து | **वृक्षेभ्यः**-மரங்களிலிருந்து |
| **कृषीवलात्**-உழவனிடமிருந்து | **कृषीवलेभ्यः**-உழவர்களிடமிருந்து |
| **आचार्यात्**-ஆசிரியரிடமிருந்து | **आचार्येभ्यः**-ஆசிரியர்களிடமிருந்து |
| **विप्रात्**-பிராமணனிடமிருந்து | **विप्रेभ्यः**-பிராமணர்களிடமிருந்து |
| **शिष्यात्**-சிஷ்யனிடமிருந்து | **शिष्येभ्यः**-சிஷ்யர்களிடமிருந்து |
| **पर्वतात्**-மலையிலிருந்து | **पर्वतेभ्यः**-மலைகளிலிருந்து |
| **बालात्**-சிறுவனிடமிருந்து | **बालेभ्यः**-சிறுவர்களிடமிருந்து |
| **भृत्यात्**-வேலைக்காரனிடமிருந்து | **भृत्येभ्यः**-வேலைக்காரர்களிடமிருந்து |
| **याचकात्**-பிச்சைக்காரனிடமிருந்து | **याचकेभ्यः**-பிச்சைக்காரர்களிட[மிருந்து |
| **दरिद्रात्**-ஏழையிடமிருந்து | **दरिद्रेभ्यः**-ஏழைகளிடமிருந்து |
| **रामात्**-ராமனிடமிருந்து | **रामेभ्यः**-ராமர்களிடமிருந்து |

## பலவின்பால் சொற்கள்

| | |
|---|---|
| **फलात्**–பழத்திலிருந்து | **फलेभ्यः**–பழங்களிலிருந்து |
| **आसनात्**–ஆஸனத்திலிருந்து | **आसनेभ्यः**–ஆஸனங்களிலிருந்து |
| **उद्यानात्**–தோட்டத்திலிருந்து | **उद्यानेभ्यः**–தோட்டங்களிலிருந்து |
| **कुसुमात्**–பூவிலிருந்து | **कुसुमेभ्यः**–பூக்களிலிருந்து |
| **क्षेत्रात्**–வயலிலிருந்து | **क्षेत्रेभ्यः**–வயல்களிலிருந்து |
| **नक्षत्रात्**–நக்ஷத்திரத்திலிருந்து | **नक्षत्रेभ्यः**–நக்ஷத்திரங்களிலிருந்து |
| **धनात्**–பணத்திலிருந்து | **धनेभ्यः**–பணங்களிலிருந்து |
| **भोजनात्**–சாப்பாட்டிலிருந்து | **भोजनेभ्यः**–சாப்பாடுகளிலிருந்து |
| **राज्यात्**–ராஜ்யத்திலிருந்து | **राज्येभ्यः**–ராஜ்யங்களிலிருந்து |
| **वनात्**–காட்டிலிருந்து | **वनेभ्यः**–காடுகளிலிருந்து |
| **पङ्कजात्**–தாமரையிலிருந்து | **पङ्कजेभ्यः**–தாமரைகளிலிருந்து |
| **सिंहासनात्**–சிம்மாஸனத்திலிருந்து | **सिंहासनेभ्यः**–சிம்மாஸனங்களி [லிருந்து |
| **सुवर्णात्**–தங்கத்திலிருந்து | **सुवर्णेभ्यः**–தங்கங்களிலிருந்து |
| **भूषणात्**–நகையிலிருந்து | **भूषणेभ्यः**–நகைகளிலிருந்து |
| **धान्यात्**–தான்யத்திலிருந்து | **धान्येभ्यः**–தான்யங்களிலிருந்து |

**जनाः नगरेभ्यः आगच्छन्ति**–ஜனங்கள் பட்டினங்களிலிருந்து வருகிறார்கள்.

**सैनिकाः अश्वेभ्यः पतन्ति**–போர்வீரர்கள் குதிரைகளிலிருந்து விழுகிறார்கள்.

**आचार्याः आसनेभ्यः उत्तिष्ठन्ति**–ஆசிரியர்கள் ஆஸனங்களிலிருந்து எழுந்திருக்கிறார்கள்.

**हरिणाः पर्वतस्य शिखरेभ्यः पतन्ति**–மான்கள் மலையின் உச்சிகளிலிருந்து விழுகின்றன.

**पर्वतेभ्यः नद्यः प्रभवन्ति**-மலைகளிலிருந்து ஆறுகள் உத்பத்தி யாகின்றன.

**वृक्षेभ्यः पर्णानि पुष्पाणि फलानि च पतन्ति**-மரங்களிலிருந்து இலைகளும் பூக்களும் பழங்களும் விழுகின்றன.

**विप्राः नृपेभ्यः निष्कान् विन्दन्ति**-பிராமணர்கள் அரசர்களிட மிருந்து தங்கக் காசுகளை அடைகிறார்கள்.

**पापेभ्यः दुःखानि उद्भवन्ति**-பாபங்களிலிருந்து துன்பங்கள் உண்டாகின்றன.

**राशिभ्यः कृषीवलाः धान्यानि आनयन्ति**-குவியல்களிலிருந்து உழவர்கள் தான்யங்களைக் கொண்டு வருகிறார்கள்.

**वराहाः पल्वलेभ्यः जलं पिबन्ति**-பன்றிகள் குட்டைகளிலிருந்து தண்ணீர் குடிக்கின்றன.

## இலக்கணம்

இந்தப் பாடத்தில் 'அ' (**अ**) வில் முடியும் ஆண்பால் பலவின் பால் சொற்களுடைய ஐந்தாம் வேற்றுமை ஒருமையும் பன்மையும் கொடுக்கப்பட்டுள்ளன. இச்சொற்களின் ஐந்தாம் வேற்றுமை பன்மை யைக் காட்டுவதற்கு **एभ्यः** என்ற விகுதியைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

உதாரணம் **राम+एभ्यः=रामेभ्यः** ராமர்களிடமிருந்து

பலவின்பால் சொற்களின் பன்மையும் ஆண்பால் சொற்களின் பன்மையைப் போலவே இருக்கும். இதுபோலவே **अ**வில் முடியும் எல்லாப் பெயர்ச்சொற்களின் பன்மையையும் எழுதிப் பழகிக்கொள்ள வேண்டும்.

குறிப்பு :— நான்காம் வேற்றுமையின் பன்மையும் ஐந்தாம் வேற்றுமையின் பன்மையும் ஒரே மாதிரியாக இருப்பதைக் கவனிக்கவும்.

உதாரணம் :— **कुसुमेभ्यः** (நான்காம் வேற்றுமை) பூக்களின் பொருட்டு

**कुसुमेभ्यः** (ஐந்தாம் வேற்றுமை) பூக்களிலிருந்து

ஆனால் இவைகளிலுள்ள வித்தியாசத்தை வாக்யங்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

உதாரணம் :— **अहं कुसुमेभ्यः उद्यानं गच्छामि** - நான் பூக்களின் பொருட்டு தோட்டத்திற்குப் போகிறேன்.

**कुसुमेभ्यः मधुकरः मकरन्दं पिबति** – பூக்களிலிருந்து வண்டு தேனைப்பருகுகிறது.

**लोभात् क्रोधः प्रभवति लोभात् कामः प्रजायते ।**
**लोभान्मोहश्च नाशश्च लोभः पापस्य कारणम् ॥**

**पदच्छेदः**– **लोभात्, क्रोधः, प्रभवति, लोभात्, कामः, प्रजायते, लोभात्, मोहः, च, नाशः, च, लोभः, पापस्य, कारणम् ॥**

பதவுரை :- **लोभात्**–பணம் முதலிய பொருளின் பேராசையால், **क्रोधः**–கோபம், **प्रभवति**–உண்டாகிறது. **लोभात्**–பேராசையால், **कामः**–விஷய சுகத்தை அனுபவிக்க வேண்டுமென்ற இச்சை, **प्रजायते**– உண்டாகிறது. **लोभात्**–பேராசையால், **मोहः च**–மதிமயக்கமும், **नाशः च**–அழிவும் (உண்டாகிறது), **लोभः**–பேராசை, **पापस्य**– பாபத்திற்கு, **कारणम्**–காரணம்.

கருத்து :— பேராசைதான் எல்லா இழிவுகளுக்கும் காரண மாகிறது. ஆசை வைத்த பொருள் கிடைக்காவிடில் மிகுந்த கோபம் உண்டாகிறது. அந்தப் பொருளை எப்படியாவது பெற்று அதன் இன்பத்தையனுபவிக்க வேண்டுமென்ற எண்ணமும் உண்டாகிறது. அவ்வாறு பொருளில் அதிக ஈடுபாடு உண்டாவதால் மதி மயங்குகிறது. அதனால் மனிதன் செய்யத்தகாத காரியங்களைச் செய்து அழிவை யடைகிறன். ஆகையால் நாம் பேராசைப் படக்கூடாது.

ஆனந்தம் அதாவது ஆத்மானந்தம். இதை நீங்கள் அனுபவிப்பதுடன் பக்தர்களுக்கும் அளித்துக் காப்பாற்றுவதால் நீங்களும் ப்ரஹ்லாத போஷகர்தான். தீவ்ர வைராக்யமுள்ள தங்களுக்கு ஸுவர்ணத்தில் சிறிதும் ஆசையில்லாததால் ஹிரண்ய வைரியாகவும் விளங்குகிறீர்கள். ந்ருஸிம்ஹர் என்ற பெயரும் தங்களுக்கு அமைந்திருக்கிறது. இத்தனை இருந்தாலும் மற்றும் ஒரு காரியத்தைச் செய்தால்தான் தாங்கள் நரஸிம்ஹர்போல் ஆகமுடியும். அதாவது அவர் பக்தனை ப்ரஹ்லாதனின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு தூணைப்பிளந்து வெளியே வந்து காக்ஷி யளித்தார். தாங்களும் பக்தனை என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு என் மனமாகிற உறுதியான தூணைப்பிளந்து என் முன்னால் வந்து தர்சனம் தரவேண்டும். இப்படிச்செய்தால் தான் நீங்கள் நரஸிஹ்மராக ஆக முடியும். அதாவது எனக்கு ஆத்மஞானத்தை உபதேசித்து என் மனதை அழித்து மோக்ஷமடையும்படி அருள் புரியவேணுமென்று பிரார்த்திக்கிறார். (5)

**सर्वज्ञतासकलशक्तियुतत्वहेतोः**
**श्रीशंभुसाम्यमखिला भवतो वदन्ति ।**
**आधिक्यमेव तव देशिक संगिरेऽहं**
**राजाङ्घ्रिरस्ति हि भवान् स तु राजमौलिः ॥ ६ ॥**

ஸர்வஜ்ஞதா ஸகல **ஶ**க்தியுதத்வஹேதோ:
ஸ்ரீ**ஶ**ம்புஸாம்யமகிலா பவதோ வதந்தி ।
ஆதிக்யமேவ தவ தே**ஶி**க ஸங்கிரேऽஹம்
ராஜாங்க்ரிரஸ்தி ஹி பவான் ஸ து ராஜமௌளி: ॥

**सर्वज्ञता**–எல்லாம் அறிந்தவராயிருக்கும் தன்மை, **सकलशक्तियुतत्व**–எல்லா சக்திகளுடனும் கூடியிருக்கும் தன்மை, **हेतोः**–இக் காரணத்தால், **भवतः**–உமக்கு, **श्रीशंभुसाम्यं**–பரமசிவனோடு ஸமமாக இருக்கும் தன்மையை, **अखिलाः**–எல்லோரும் **वदन्ति**–சொல்கிறார்கள். **देशिक**–ஸத்குருவே, **अहं**–நானோவெனில், **तव**–உமக்கு, **आधिक्यमेव**–மேலாயிருக்கும் தன்மையையே, **संगिरे**–சொல்கிறேன். **हि**–ஏனெனில் **भवान्**–தாங்கள், **राजाङ्घ्रिः**–அரசர்களைக் காலில் உடையவராக, **अस्ति**–இருக்கிறீர். **स तु**–அவரோவெனில், **राजमौलिः**–ராஜாவை சிரஸில் உடையவர்.

பரமேசுவரன் ஸர்வஜ்ஞர் எல்லாம் அறிந்தவர். ஸர்வசக்தர் எல்லா சக்திகளும் பொருந்தியவர். இவ்விரண்டும் இருப்பதால்தான் பரம சிவனுக்குப் பெருமை. இவ்விரண்டும் தங்களிடமும் உள்ளன. தாங்கள் எல்லாவற்றையும் அறிந்தவரானதாலும் தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லாததினுலும் தாங்களும் ஸர்வக்ஞர்தான். காலடியைக் கண்டுபிடித்துக் கும்பாபிஷேகம் நடத்தியது, இறந்துபோன பல்லியை பிழைக்கவைத்தது முதலிய கார்யங்களால் தாங்கள் ஸர்வ சக்தர் என்பதையும் காட்டியிருக்கிறீர்கள். இக்காரணத்தால் தாங்கள் பரமேசுவரனுக்கு ஸமமானவர் என்று எல்லோரும் சொல்கிருர்கள். நான் இத்துடன் திருப்தியடையவில்லை. தாங்கள் பரமேசுவரனைக் காட்டிலும் மேலானவர் என்பதை காரணத்துடன் நிரூபிக்கிறேன். பரமசிவனுக்கு ராஜமௌளி என்று ஒரு பெயருண்டு. ராஜா என்ருல் சந்திரன். சந்திரனை சிரஸில் தாங்கிக்கொண்டிருக்கிருர். அதனுல் அந்தப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. தங்கள் சரணத்தில் அநேகம் அரசர்கள் இருக்கிருர்கள். அதாவது எல்லா அரசர்களும் தங்கள் காலடியில் விழுந்து வணங்குகிருர்கள். ஆகவே ஒரு ராஜாவை தலையில் வைத்துக்கொண்டிருக்கும் பரமசிவன் பெரியவரா பல ராஜாக்களை காலில் வைத்துக்கொண்டிருக்கும் தாங்கள் பெரியவரா? நிச்சயம் தாங்கள் தான் பெரியவர் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள்.

ஸ்ரீமதாசார்யேந்த்ரஸ்தவம் முற்றிற்று.

## ॥ नवरत्नमाला ॥

## நவரத்னமாலா

लोकं समस्तमपि मोहमहान्धकार-
नश्यद्दृशं भवमहाजलधौ पतन्तम् ।
स्वोक्त्यञ्जनेन समपालयदाशु यः सः
दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ १ ॥

லோகம் ஸமஸ்தமபி மோஹ மஹாந்தகார
நச்யத் த்ருசம் பவ மஹாஜலதௌ பதந்தம் ।
ஸ்வோக்த்யஞ்ஜனேந ஸமபாலயதாசு ய: ஸ:
த்ருக்கோசரோ பவது தேசிகராண்மமாசு ॥

**यः**—எவர், **मोहमहान्धकार**—மோஹமென்னும் பெரிய இருளால், **नश्यद्दृशं**—அழிந்துபோகும் பார்வையையுடையவரும் (அதனால்), **भवमहाजलधौ**—ஸம்ஸாரமென்னும் பெரிய ஸமுத்திரத்தில், **पतन्तं**—விழுகின்றவருமான, **समस्तं लोकमपि**—எல்லா ஜனங்களையும், **स्वोक्त्यञ्जनेन**-தமது உபதேசமாகிற மையினால், **आशु**-விரைவில் **समपालयत्**—காப்பாற்றினரோ, **सः**-அந்த, **देशिकराट्**—ஆசார்யவர்யர், **आशु**—சீக்கிரம், **मम**—என்னுடைய, **दृग्गोचरः**—கண்களுக்குப் புலப்படுகிறவராக, **भवतु**—ஆகட்டும்.

நம் கண்களுக்கு வெளிச்சமிருக்கும்பொழுது தான் பார்க்கும்திறமை உண்டு. இருட்டில் நம் கண்களால் ஒன்றையும் பார்க்கமுடியாது. அதிலும் மழை காலத்தில் இரவில் கும்மிருட்டில் வழி நடந்தோமானால், கண்களுக்கு ஒன்றும்தெரியாமல் வழி தவறி பாழும் கிணற்றிலும் விழுந்து விடலாம். அச்சமயம் ஓர் மஹா புருஷன் வந்து நம்மை கைதூக்கிவிட்டு இருளிலும் பார்க்கும் சக்தியைத்தரும் மையை கண்ணில் இட்டு வழியும் காட்டினால் அந்த மஹோபகாரியை நாம் மறக்க முடியுமா ? அதுபோல சரீராதிகளையே நான் என்று எண்ணுவதாகிய மோஹத்ததால் ஆத்மாவைப்பற்றிய உண்மை அறிவு நமக்கு ஏற்படவில்லை. சரீராபிமானத்துடன் நாம் செய்யும் கார்யங்களால் திரும்பத் திரும்ப

பிறவி மரணங்களையடைந்து துன்பப்படுகிறோம். தேசிகராஜர் (ஸ்ரீ ந்ருஸிம்மபாரதீ ஸ்வாமிகள்) துன்பப்படும் ஜனங்களிடம் கிருபையால் அவர்களுக்கு ஆத்மதத்வத்தை உபதேசித்து மோஹத்தை நீக்கி கைதூக்கிவிடுகிறார். இவர் இப்பொழுது மறைந்துவிட்டார். ஆனாலும் நான் கண்களால் பார்க்கும்படியாக எதிரில் வந்து தர்சனம் கொடுக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறார். (1)

**पाषण्डमुख्यमतकुम्भिषु केसरीन्द्रः**
**पापाटवीदवविभावसुराननतानाम् ।**
**अद्वैतवारिनिधिपूर्णशशी च यः सः**
**दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ २ ॥**

பாஷண்ட முக்யமதகும்பிஷு கேஸரீந்த்ர:
பாபாடவீ தவ விபாவஸு ராநதாநாம் ।
அத்வைத வாரிநிதி பூர்ணசசீ ச ய: ஸ:
த்ருக் கோசரோ பவது தேசிகராண் மமாசு ॥

**यः**–எவர், **पाषण्डमुख्यमत**–வேதத்தைக் கண்டிக்கிற பிரபலமான நாஸ்திக மதங்களாகிற, **कुम्भिषु**–யானைகளிடம், **केसरीन्द्रः**–சிறந்த ஸிம்மமாகவும், **आनतानां**-வணங்குபவர்களின், **पापाटवी**-பாபங்களாகிற காட்டிற்கு, **दवविभावसुः**-காட்டுத்தீயாகவும், **अद्वैतवारिनिधि**-அத்வைத மாகிற ஸமுத்திரத்திற்கு, **पूर्णशशी च**–பூர்ண சந்திரனுக்வும் (இருக்கிறாரோ), **सः**–அந்த, **देशिकराट्**–குருராஜர், **आशु**–,சீக்கிரம் **मम**–எனக்கு, **दृग्गोचरः**–கண்களுக்குத் தெரிபவராக, **भवतु**–ஆகட்டும்.

காட்டில் ஸிம்மத்தைக் கண்டால் யானைகள் பயந்து ஓடி மறைந்து விடும். ஸிம்மத்தினிடம் அகப்பட்டுவிட்டால் அவை பிழைக்கமுடியாது. இதுபோல பரம ஆஸ்திகர்களான ஆசார்யரைக் கண்ட மாத்திரத்தில் நாஸ்திகர்கள் ஓடி ஒளிந்துவிடுவார்கள். அல்லது இவருடைய உபதேசத்தைக் கேட்ட மாத்திரத்தில் நாஸ்திக வாதத்தைக் கைவிட்டு ஆஸ்திகர்களாக ஆய்விடுவார்கள். காட்டுத்தீ கிளம்பினால் காட்டிலுள்ள மரங்களையெல்லாம் சாம்பலாக்கிவிடுவதுபோல் தம்மை வணங்கும் பக்தர் களின் எல்லாப் பாபங்களையும் போக்கி விடுவார்கள். பௌர்ணமியன்று ஆகாசத்தில் தோன்றும் [illegible] சந்திரன் கடலைப் பொங்கி எழச்செய்வது

பதவுரை

கருதா மறவாநெறி — நினைப்பு மறப்பு என்ற இரண்டும்கெட்ட நிர்விகல்ப நிலையை, காண எனக்கு — நான் என் அறிவால் பார்க்க அடியேனுக்கு, இருதாள் வனசம் தர — இரண்டு திருவடித்தாமரைகளை அளிப்பதற்கு, என்று இசைவாய் — என்று திருவுள்ளம் பற்றுவாயோ, வரதா, முருகா — வரையாது கொடுக்கும் வள்ளலே, அழகனே, மயில் வாகனனே — மயிலை வாகனமாக உடையவனே, விரதா — ஸத்ய ஸங்கல்பனே, சுர — தேவாதி தேவனே, சூர் — சூரபத்மனை, அவி — அழித்த, பாடணனே — கல்போன்ற திண்மையுடையவனே.

விரிவுரை

**வரதா :—**

"வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டிய வறுதவும் — பெருமாளே" (604)

"வேண்டுமடியர் புலவர் வேண்ட
அரியபொருளை வேண்டுமளவி உதவும் — பெருமாளே" (603)

"நசையு நர்க்கார்த்தும் இசை பேராளா
அலந்தோர்க் களிக்கும் பொலம் பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றடு கலத்துப்
பரிசிலர் தாங்கும் உருகெழு நெடுவேள்", (நக்கீரர்)

முருகனுக்கு கலியுக வரதன் என்றே பெயருண்டு.

**விரதா :** விரதன் என்பதற்கு "யோகி" என்ற பொருளும் உண்டு. அல்லது அடியார்களை ரக்ஷிக்கும் விரதத்தைப் பூண்டவன் என்றுமாம், அல்லது விரதத்தால் அடையப்பட்டவனே. விரதம் என்பது வேதத்தின் கர்மகாண்டத்தில் கூறப்பட்ட யாக யக்ஞாதிகளையும் குறிக்கும். அவற்றிற்கு அதிஷ்டாதாவாக இருக்கும் யக்ஞ புருஷன் என்றும் பொருள் கொள்ளலாம்.

**சூர்அவிபாடணன் :—** சூர+விபாடணன் என்றும் பிரித்து சூரனை அழித்தவனே என்றும் பொருள் கூறுவர். விபாடம் என்பது அம்பு. அல்லது மரணம் என்றும் பொருள்.

**இருதாள் வனசம் தர :—** அருணகிரியார் திருவடி தரிசனம் திருவடி தீக்ஷை பெற்றார் என்பதனைத் திருப்புகழ் பாக்களில் பல இடங்களில் பார்க்கின்றோம்.

" தகையா தெனக்குன் அடிகாண் வைத்த
தனி ஏரகத்தின் — முருகோனே " (620)

" அருணை நகர் மிசை கருணை யொடருளிய
பரமவொரு வசனமும் இரு சரணமும் — மறவேனே " (1070)

" மருளும் அறிவினன் அடிமுடி அறிகிலன்
அருணை நகர்மிசை கருணை யொடருளிய
மவுன வசனமு மிருபெருசரணமும் — மறவேனே " (1194)

திருவடி தீக்ஷை பெற்றது :—

" இபமுகவனுக்குகந்த இளையமுருக் கடம்ப
எனது தலையிற் பதங்கள் — அருள்வோனே " (443)

" கிண்கிணீ முகவித பதயுக மலர்
தந்த பேரருள் கனவிலு நனவிலு — மறவேனே " (595)

" அணுகி முன் அளித்த பாதம் — அருள்வாயே " (1131)

குறிப்பு :— இந்தப்பாடல் மிக முக்கியமானது. அருணகிரிநாதர் உயிர் மீது வெறுப்புற்று தற்கொலை செய்துகொள்ள யத்தனித்ததையும் அச்சமயம் முருகன் வந்து ஆட்கொண்டதையும் அருமையான அக்சான்று கொண்ட திருப்புகழிது.

" காமுகன் அகப்பட்ட ஆசையை மறப்பித்த
கால்களை மறக்கைக்கும் வருமோதான் " (994)

" தலைநாளிற் பதமேத்தி அன்புற
உபதேசப் பொருளூட்டி " (767)

இதுமட்டுமன்றி முருகனின் நடன தரிசனம் கொடுங்குன்றம், செந்திற்பதி, திருவெண்ணெய்நல்லூர், வயலூர், விராலிமலை முதலிய இடங்களில் கண்டிருக்கின்றார். வயலூரில்,

" வயலி நகரியில் அருள்பெற மயில் மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனசமலரடி கனவிலு நனவிலு — மறவேனே " என்றார்.

கந்தரலங்காரத்தின் 15வது பாடலில் தனது பாவடி ஏட்டில் முருகன் திருவடிபட்ட... ...றுகின்றார். 40-வது பாடலில்

"................................................ அவன்
காலபட்டழிந்ததிங்கு என்தலை
மேல் அயன் கையெழுத்தே" என்றார்.

கந்தரனுபூதிப் பாடல் 44-ல்

"சாடும் தனி வேல் முருகன் சரணம்
சூடும்படி தந்தது சொல்லுமதோ"

என்று இந்த 21வது பாடலில் கேட்கும் பிரார்த்தனை நிறைவேறியதாகப் பாடியுள்ளார்.

இதுபோன்று நாயன்மார்களில் அப்பருக்கும், சுந்தரருக்கும் இறைவன் திருவடி சூட்டினதை இங்கு ஞாபகப்படுத்துகிறோம்.

## இருபத்திரண்டாவது பாட்டு

காளைக்குமரேசன் எனக் கருதித்
தாளைப்பணியத் தவம் எய்தியவா
பாளைக்குழல் வள்ளிபதம் பணியும்
வேளைச்சுர பூபதி மேருவையே

### பதவுரை

பாளைக்குழல் வள்ளி — கூந்தல் பனைப் பாளைபோன்று நீண்டு அடர்ந்த கூந்தலையுடைய வள்ளியம்மையின், பதம் பணியும் — பாதங்களை ஆச்ரயிக்கின்ற, வணங்குகின்ற, வேளை — முருகனை, சுர பூபதி மேருவையே — தேவலோகத்திற்குத் தலைவனும் மேருமலைபோன்ற கம்பீரமும், உயர்வும் திண்மையும் கலங்காமையுமுள்ளவனையே, காளைக் குமரேசன் — ரிஷபம்போன்ற அழகும், நடையும், அஞ்சாமையுமுடைய குமரக்கடவுள், எனக்கருதி — என்று நிர்ணயம் செய்து அவனது தாளைப்பணிய — திருவடிகளை வணங்கும்படியான, தவம் எய்தியவா — தவத்தை நான் பெற்றவகை அதிசயிக்கத்தக்கது.

### விரிவுரை

"வள்ளி பதம் பணியும் முருகனே குமரன்," என்ற நயம் முன், "திணியான மனோசிலை மீது" என்றபாடலுக்கு எழுதிய விரிவுரை ஈண்டும் பொருந்தும். பக்குவ ஆன்மாக்களை அடைவதில் இறைவன் ஆவல்கொண்டு, அவனே வலுவில் சென்று ஆட்கொள்வான் என்ற

கருத்தில் அவ்வாறு செய்யும் முருகனே, இம்மையிலேயே ஜீவன் முக்தி அருளும் குமரனாக இருக்கிறான் என்று பொருள். முன்பு குமாரன் என்ற சொல்லின் உள் பொருள் விளக்கப்பட்டிருக்கிறது. "கு" என்றால் பிருதிவி என்றும், "மா" என்றால் மோக்ஷ லக்ஷ்மி என்றும், "ரா" என்றால் கொடுத்தல் என்றும், மந்த்ரார்த்த மேற்கோளோடு 15வது பாடலில் கூறினோம். அதைப் பார்க்கவும்.

ஆக இப்பாட்டில் 6ம் பாட்டுத் தத்துவமும் 15வது பாட்டுத் தத்துவமும் சேர்ந்து அமைந்திருக்கின்றது. ஆன்ம பரிபக்குவ மெய்திய உயிர்களை இறைவனே குருநாதனாகச் சென்று ஆள் கொள்வான் என்பது சிவஞானபோதம் 8ம் சூத்திர முடிபு. அவ்வாறு இறைவன் ஆட்கொள்ளும் காரணத்தாலேயே ஜீவன் முக்தி நிலை ஏற்படுகின்றது. இதுவே நிர்விகல்ப சமாதி நிலை என்றும் கூறுவர். மாணிக்கவாசகர் இவ்வாறு ஆட்கொள்ளப்பட்டு ஜீவன் முக்தரானவர். அதுபோன்றே அருணகிரியாரும் அந்த அநுபவத்தைத்தான் இப்பாட்டில் கூறுகின்றார். வள்ளியை மணந்த முருகனே குமரக்கடவுள் என்பது சாமான்யமான கருத்தல்ல என்பதை நாம் உணரவேண்டும்.

நிற்க, "குமரேசன் எனக்கருதி தாளைப்பணிய" என்ற சொற்றொடரில், "என," என்பதால், என்று வாயினால் சொல்லியும், 'கருதி' மனதால் நினைத்தும், "தாளைப்பணிய," என்பதால், உடம்பால் வணங்கியும் என்று கூறியதாகவும் பொருள் கொள்ள இடமுண்டாயினும், "மேருவையே குமரேசனாகக் கருதி", என்பதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. ஆதலால் இதுவே சிறப்பான பொருளாகக் கொள்ளலாம். வள்ளி மணாளனே குமாரக்கடவுள் என்று சொல்வது சுலபம். இதில் என்ன ஐயம் உளது? என்றுகூட கேட்கத்தோன்றும். ஆனால் அப்பதங்களில் அடங்கிய உட்பொருளை சிந்தித்தால் ஆழ்ந்த கருத்து வெளியாகின்றது. அருணகிரியாருக்கு முருகன் வள்ளியை மணந்தவன் என்று கூறுவதில் அலாதி திருப்தி இருக்கிறது. தனக்கு வலிய வந்து ஆட்கொண்டு செய்த உபதேசத்தை வள்ளியைக் கலியாணஞ் செய்ததோடு ஒப்பிட்டுக் கந்தரலங்காரத்தில் கூறுகிறார்.

"கின்னம் குறித்தடியேன் செவி
நீ அன்று கேட்கச் சொன்ன
குன்னம் குறிச்சி வெளியாக்கி
விட்டது கோடு குழல்

சின்னங் குறிக்கக் குறிஞ்சிக்
கிழவர் சிறுமிதனை
முன்னம் குறிச்சியில் சென்று
கல்யாணம் முயன்றவனே" (24வது பாடல்)

## இருபத்திமூன்றுவது பாட்டு

**அடியைக் குறியா தறியாமையினுன்**
**முடியக் கெடவோ முறையோ முறையோ**
**வடிவிக்ரம வேள் மகிபா குறமின்**
**கொடியைப் புணரும்குண பூதரனே**

### பதவுரை

வடி — அழகும் கூர்மையும் பொருந்திய, விக்கிரம — பராக்கிரமம் பொருந்திய, வேல் — வேலாயுதத்தைத் தாங்கிய, மகிபா — ஜகத்திற்கு ஈச்வரனுனவனே, குறமின் — குறவர் வளர்த்த மின்னலைப்போன்ற, கொடியை — வள்ளியை; புணரும் — சேருகின்ற, குணபூதரனே — குணக்குன்றே, அடியைக் குறியாது — உன் திருவடிகளில் லக்ஷியம் வைக்காமல், அறியாமையினுல் — அவித்தையால், அஞ்ஞானத்தால், மடமையால், முடியக்கெடவோ — முழுதும் அழிந்துபோகவோ, முறையோ முறையோ — இது நியாயமாகுமோ.

### விரிவுரை

வல்லி என்ற வடமொழிப் பதத்திற்கே கொடி என்று பொருள். கொடி என்ருல் அது தாவிப்படர ஓர் கொழும் கொம்பு தேவை, என்பது புலப்படும். அதாவது ஆன்மா சுதந்தரமற்றது. அவாப்த ஸமஸ்த காமனும் ஸர்வ சுதந்தரனும் இருக்கிற இறைவனையே அது பற்றவேண்டுமென்பதுதான் முறை. அதைவிட்டு, அவித்தையின் காரணமாகத் தனது ஆதாரத்தை அறியாது உயிர்கள் மயங்குகின்றன. "அடி" என்பதற்கு திருவடி என்பது சாமான்யப் பொருள். அதற்கு "ஆதி, தாது, மூலம், கடவுள்" என்றெல்லாம் பொருள்களிருக்கின்றன. ஆன்மா தன்னையும் அறிவதில்லை, தனக்கு அடியான், ஆதியான முதல்வனையும் அறிவதில்லை. இது அவித்தையால் ஏற்படுவது. இது அசுத்த மாயையின் ஐந்துவகையிலொன்று. 5ம் பாட்டு விரிவுரையில் காண்க.

இவ்வாறு ஆன்மா மாயையின் வசப்பட்டு அவித்தையின் காரணமாகத் தன்னையும் அறியாமல் த[illegible]லத்தையும் அறியாமல்

மயங்கிப் பல ஜன்மங்களை யெடுத்து ஈடேறமுடியாமல் உழலும். இவ்வாறு உழலுவது ஆன்ம லக்ஷணத்திற்கும் பொருந்தாது. இறைவனின் கருணைத்திறத்திற்கும் பொருந்தாது என்று இருவகையும் தோன்ற "முறையோ? முறையோ?" என இரட்டித்தார். முன்பு 4ம் பாட்டிலும் "தகுமோ தகுமோ" என்று இரட்டித்ததையும் காண்க. இறைவனருள் கிட்டினால் அது தன்னையும் உணரும் இறைவனையும் உணரும். ஈண்டும் வள்ளியின் கணவன் என்று குறித்தமையால் அவன் அருள்பெற்ற ஆன்மாவே தனது 'அடி' யாகிய மூலத்தையும் தன்னையும் உணரும் என்று குறிப்பிடுகின்றார். இதனைப் பட்டினத்தடிகள் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் (11ம் திருமுறை)

"இன்னது யான் என்று அறியேன் என்னை
ஏதினும் தேடினேன் யாதினும் காணேன் ...
... ... ...
மங்கை பங்க கங்கை நாயக நின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப்படலம் கீறித்தூய
ஞான நாட்டம் பெற்றபின் நானும்
நின்பெருந்தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை யனைத்தையும் கண்டேன் என்னை?
நின்னைக் காணா மாந்தர்
தன்னையுங் காணாத் தன்மையோரே",

என்று அழகாகக் கூறுகின்றார்.

ஆக "அடியைக் குறியாது" என்பதில் ஆன்மா தனது மூலமாகிய முதல்வனைத் தேட முற்படாமல், என்று பொருள் கொண்டோம். இதற்கேற்ப வள்ளியைக் கொடி என்பதால் அதற்கு ஆதாரமான கொழுங் கொம்பையும் குறித்தது என்றும் கூறினோம்.

சுருங்கச் சொன்னால் இப்பாட்டில் அஞ்ஞான இருள் சூழ்ந்த ஆன்மா தனது ஆதாரத்தை உணராது அழியும் என்பதும், வேலைச் சொன்னதால் அஞ்ஞானத்தை அழிக்கும் மெய்ஞ்ஞானத்தைச் சொன்னது என்பதும், மின்கொடியைப் புணரும் என்பதனால் பக்குவ ஆன்மாவை, அவன் வலிய வந்து கலக்கும் கருணையும், குணபூதரன் என்றதால் இறைவனின் குணபூர்த்தியைக் கூறி, அதோடு ஆன்மாவின் கிஞ்சிக்ஞதையையும் குறிப்பிடுகிறார் என்பதுமான,

அரிய பெரிய சித்தாந்த உண்மைகள் இப்பாட்டில் புலப்படுவது கண்டு தெளிக. இவ்வாறு அறிவார் சிவயோகிகள் என்றும் ஏனையோர் கர்மிகள் என்றும் கூறுகிறார் கந்தரலங்காரம் 26-ம் பாட்டில்,

" நீலச்சிகண்டியில் ஏறும் பிரான் எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி உடன் வருவான் குருநாதன் சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறிவார் சிவயோகிகளே
காலத்தை வென்றிருப்பார் மரிப்பார் வெறும் கர்மிகளே "

### இருபத்திநான்காம் பாட்டு

**கூர்வேல் விழிமங்கையர் கொங்கையிலே**
**சேர்வேனருள் சேரவு மெண்ணுமதோ**
**சூர் வேரொடு குன்று தொளைத்த நெடும்**
**போர் வேல புரந்தர பூபதியே**

### பதவுரை

சூர்வேரொடு குன்று — சூரர் குலத்தையும் கிரௌஞ்சம் என்னும் மலையையும் அடியோடு, தொளைத்த — பிளந்து அழித்த, நெடும் போர் வேல — நீண்டதாயும், போர் செய்ய வல்லதாயுமிருக்கும் வேற்படையை உடையவனே, புரந்தர பூபதியே - இந்திரனுடைய உலகத்திற்குத் தலைவனே, கூர்வேல் விழி — வேல்போன்று வடிவிலும் கூர்மையிலும் ஒத்தகண்களையுடைய, மங்கையர் கொங்கையிலே — பெண்களின் ஸ்தனங்களில், சேர்வேன் — தோய்வதற்கு விருப்பமுள்ள நாயேன் அருள் சேரவும் எண்ணுமதோ — உன்னுடைய திருவருளைப் பெற எண்ணுவேனே.

### விரிவுரை

ஈண்டும், 9ம் பாடலிலும், 34வது பாடலிலும் 'மங்கையர்' என்று பன்மையில் கூறியிருப்பதும், 4ம் பாடலில் " மாதொடு " என்று ஒருமையில் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது. 4ம் பாட்டில் ஒருமையில் குறிப்பது 'மனைவி' என்ற பொருளிலும், 9, 24, 34 பாடல்களில் கூறிய பன்மை 'பரத்தையர்' என்ற பொருளிலும் கொள்ளல்வேண்டும்.

அருணகிரிநாதர் தனது இளமையில் விலைமாதர் ஆசையில் சிக்கி உழன்றவராதலால் அதைத் தன்னுடைய நூல்கள் பல வற்றிலும், பல இடங்களிலும் பல வகையாகவும் கண்டித்திருக்கிறார்.

பெண்கள்மீது கொள்ளும் காம இச்சை ஆன்ம முன்னேற்றத் திற்கு முற்றிலும் தடையாகும் என்பதை வலியுறுத்தவே இவ்வாறு பல பாடல்களில் கூறுகின்றார். மங்கையரைச் சேர தீரா ஆசை கொண்டவனுக்கு வேறு நினைப்பே வராது. அதிலும் இறைவன் ஞாபகம் அறவே வராது என்பதை உறுதியாகச் சொல்லுகிறார். மங்கையர் கொங்கையை விரும்புகின்றவன் மனம் இறைவனருளைப் பெற எண்ணுமோ, எண்ணவே எண்ணாது என்று முடிக்கின்றார்.

### இருபத்தைந்தாம் பாட்டு

**மெய்யே யென வெவ்வினை வாழ்வை யுகந்து**
**ஐயோ அடியேன் அலையத் தகுமோ**
**கையோ அயிலோ கழலோ முழுதுஞ்**
**செய்யோய் மயிலேறிய சேவகனே**

### பதவுரை

கையோ, அயிலோ, கழலோ முழுதும் செய்யோய் – உனது திருக் கரங்கள், வேல், திருவடிகளேயன்றி திருமேனி முழுதுமே சிவந்ததா யிருப்பவனே, மயிலேறிய சேவகனே – மயில்மீதமர்ந்த காவலனே, வெவ்வினை வாழ்வை – வினைப்பயனால் ஏற்பட்ட இவ்வுலக வாழ்வை, மெய்யே என உகந்து – சாஸ்வதமென்றெண்ணி, அதில் மகிழ்ச்சியுடன் விரும்பி, அடியேன் நினது அடிமையாகிய நான், அலையத் தகுமோ – திண்டாடத் தகுமோ, ஐயோ – அந்தோ பரிதாபம் !

### விரிவுரை

முருகனைச், "சேயோன்" என்று தொல்காப்பியம் கூறுகின்றது

"செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல் வரும் காதினன்,"

என்கிறார் நக்கீரர். "செக்கர் நிறமாயிருக்கும் பெருமாளே" என்று திருத்தணித் திருப்புகழில் (280) அருணகிரியாரும் கூறுகின்றார். 'பவழநிறமேனி' (வித்ருமாபம்) என்று கௌமார தந்த்ரம் கூறு கின்றது. இளம் சூரியன் போன்றமேனி (தருணாருண ஸங்காசம்) என்றும் கூறுகின்றது. குங்கும வர்ணம் (ஸிந்தூராருணம்) என்றும் கூறும். பாலசூர்ய ஸமப்ரபம், கமலாருணாபம், தருணரவிஸமாபம், பால ஸூர்ய ப்ரதீகாசம், ரக்த வர்ணம், என்று சில்பசாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்வாறு சிவப்பு நிறமான முருகனை, "மயிலேறிய

# ஆஸ்திக மதங்கள்

ஸ்ரீ V. N. வெங்கடராம சாஸ்திரிகள்

இதுவரை நாஸ்திக மதங்களைப் பற்றிக் கூறினோம். இனி ஆஸ்திக மதங்களைப் பற்றி விவரிப்போம்.

வேதங்களே முக்கியப் பிரமாணங்கள் என ஒப்புக்கொள்பவர்களே ஆஸ்திகர் எனப் படுபவர். எனவே வேதங்களிலும் அவற்றையே பின்பற்றும் ஸ்மிருதிகள், புராண இதிகாசங்களிலும் கூறப்படும் எல்லா தர்மங்களும் இவர்களுக்குப் பிரமாணங்கள். ஆதலால் கடவுள் உண்டு. தர்மாதர்மங்களும், புண்ணிய பாபங்களும் உண்டு. அவற்றின் பயனான சுக துக்கங்கள் உண்டு சுவர்க்க நரகங்கள் உண்டு. மறு பிறப்பு உண்டு. மோக்ஷம் உண்டு. என்ற வேதங்களின் கருத்தே ஆஸ்திகர்களின் அடிப்படைக் கொள்கைகளாகும். பொதுவாக ஆஸ்திகர்களை வைசேஷிகர், நையாயிகர், மீமாம்ஸகர், ஸாங்கியர், யோகிகள், வேதாந்திகள் என ஆறு வகையாகப் பிரிக்கலாம். கணாத முனிவர் வைசேஷிக சாஸ்திரத்தையும், கௌதம முனிவர் நியாய சாஸ்திரத்தையும், ஜைமினி முனிவர் கர்ம மீமாம்ஸா சாஸ்திரத்தையும், கபில முனிவர் சாங்கிய சாஸ்திரத்தையும், பதஞ்ஜலி முனிவர் யோக சாஸ்திரத்தையும் வியாஸ முனிவர் வேதாந்த சாஸ்திரத்தையும் பரம கருணையுடன் இயற்றி உலகிற்கு அருளியுள்ளனர்.

இவற்றுள் சாங்கியம், யோகம், வேதாந்தம் என்ற மூன்றையும் பிரஸ்தானத்திரயம் என்று சிலர் கூறுவர். வேதாந்தத்திலுள்ள பாஷ்யங்களுடன் கூடிய பிரம்மசூத்திரம், பகவத்கீதை, உபநிஷத்துக்கள் ஆகியவைகளே பிரஸ்தானத்திரயம் எனப் பலர் கருதுகின்றனர். தத்துவக்ஞானத்திற்கு அனுகூலமான மார்க்கங்களைப் போதிக்கும் நூலுக்குப் பிரஸ்தானம் என்று பெயர். இந்த ஆறு ஆஸ்திக மதங்களைப் பற்றித் தனித்தனியே சுருக்கமாகக் கூறுவோம்.

1. வைசேஷிக மதம் : உலகிலுள்ள அந்தந்தப் பதார்த்தங்களின் ஸ்வரூபத்தை விசேஷமாக விளக்கிக்கூறுவது வைசேஷிக தர்சனம். 'விசேஷம்' என்ற பதார்த்தத்தைச் சிறப்பாக நிரூபிப்பதால் இதற்கு வைசேஷிக மதம் எனப்பெயர் வந்தது. இம்மதத்தின் முக்கியமான கொள்கைகள் வருமாறு :—திரவ்யம், குணம், கர்மா, ஸாமான்யம், விசேஷம், ஸமவாயம், அபாவம் என பதார்த்தங்கள்

ஏழு வகைப்படும். அவற்றுள் பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனது என்ற ஒன்பதும் திரவ்யங்களாகும்

ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், ஸங்கியை, பரிமாணம், பிருதக்த்வம், ஸம்யோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், ஸ்நேஹம், சப்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்தினம், தர்மம், அதர்மம், ஸம்ஸ்காரம் என்ற இருபத்திநான்கும் குணங்கள் எனப்படும்.

கிளம்புதல், விழுதல், சுருங்குதல், விரிதல், செல்லுதல் என்ற ஐந்தும் கர்மாக்களாகும்.

பரம், அபரம் என ஸாமான்யம் இருவகைப்படும்.

நித்திய திரவ்யங்களில் பொருந்தியுள்ளவை விசேஷங்களாகும். இவை அளவற்றவை. பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு இவற்றின் பரமாணுக்களும், ஆகாயம், காலம், திக்கு, ஆத்மா, மனது ஆகியவைகளும் நித்யத்திரவ்யங்களாகும்.

ஸமவாயம் என்பது ஒருவகைச் சம்பந்தம். இது ஒன்றே.

பிராகபாவம், ப்ரத்வம்ஸாபாவம், அத்யந்தாபாவம், அந்யோன்யாபாவம் என் அபாவம் நான்கு வகைப்படும். இவ்வாறு ஏழு பதார்த்தங்களையும் அதன் உட்பிரிவுகளையும், லக்ஷண லக்ஷியங்களுடன் இந்த மதம் விளக்கமாக நிரூபிக்கின்றது.

**சிருஷ்டி:** உலக சிருஷ்டியைப்பற்றி வைசேஷிகர் பின் வருமாறு கூறுவர்:— கடவுள் ஆதியில் உலகைப்படைக்க வேண்டுமென்று விரும்புகிறார். அவர்து இச்சை காரணமாகப் பரமாணுக்களில் ஓர் இயக்கம் தோன்றுகிறது. இரு பரமாணுக்கள் சேர்ந்து ஈரணு வாகின்றது. மூன்று ஈரணுக்கள் சேர்ந்து மூவணுவாகின்றது. நான்கு மூவணுக்கள் கூடி சதுரணுகம் உண்டாகின்றது. இதே முறையில் ஒன்றோடொன்று சேர்ந்து பிருதிவி முதலிய மஹாபூதங்களும், அவயவங்களும், சரீரங்களும் சகலப் பிரபஞ்சங்களுமுண்டாகின்றன. இதுவே இம்மதத்தின் படைப்பு முறை.

(தொடரும்)

## ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு விஜய யாத்திரை

ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீஜகத்குரு ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த மஹா ஸ்வாமிகள் ஆந்திர பிரதேசத்தில் வேமலவாடாவில் சங்கரஜயந்தி உத்ஸவத்தை நடத்திவிட்டு ஸ்ரீராஜ ராஜேசுவரர் ஆலயத்தில் விசேஷ பூஜைகள் நடத்தி ஆலயத்துக்கு ரூ. 1008 காணிக்கையும் அர்ச்சகர்களுக்கு ரூ. 1500 ஸன்மானமளித்து (சென்ற இதழில் ரூ. 150 என்று இருப்பதை 1500 என்று திருத்தி வாசிக்கவும்) மேலே யாத்திரை தொடங்கி கோதாவரிதீரத்தில் பாஸர், பைம்ஸா, காஞ்புரம், விக்ஸிடிபேட்டை, மனசெரியால், பெல்லம்பள்ளி, ஸிர்பூர் முதலான ஊர்களுக்கு விஜயம் செய்தார்கள். ஒவ்வொரு ஊரிலும் எல்லா மக்களும் தேவாலய அதிகாரிகளும் ஒன்றுகூடி பூர்ணகும்பம் கோவில் மரியாதைகளுடன் வரவேற்று பல்லக்கு ஊர்வலம் நடத்தி உபசரித்தனர். ஸ்ரீ மஹா ஸ்வாமிகளும் உபதேச உரை நிகழ்த்தி ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவர பூஜை நடத்தி தீர்த்த பிரஸாதம் அருளி பக்தர்களை அனுக்ரஹித்தார்கள்.

பாஸரில் ஸரஸ்வதீ தேவாலயத்தில் அம்பாளுக்கு 108 வெள்ளிக் காசுகளால் அர்ச்சனை நடத்தினார்கள். மனசெரியாலில் ஸ்ரீ கன்னிகா பரமேச்வரி ஆலயத்துக்கும் ஸ்ரீ வெங்கடேச்வர ஸ்வாமி ஆலயத்துக்கும் விஜயம் செய்தார்கள். காகஜ்பூரில் மில்க்பாக்டரி, காகித பாக்டரிகளுக்கு விஜயம் செய்தார்கள். ஆந்திர பிரதேச எல்லையான சுசீபாபாடில் 4—6—66 அன்று எண்டோமெண்ட் மந்திரி, கமிஷனர், ஜில்லா கலெக்டர் முதலிய உயர் அதிகாரிகள் மஹா ஸந்நிதானத்தை வழியனுப்பினார்கள். மஹாராஷ்டிர எல்லையில் போலீஸ் அதிகாரிகள் தாசீல்தார் மற்றும் யாவரும் வரவேற்றனர் முதன் முதலில் ராஜூ ராவுக்கு விஜயம் செய்தார்கள் பல இடங்களில் ஹிந்தியிலும் உபதேசித்தார்கள், சந்திராபுரம், ஹிங்கனகட் வழியாக 7௳ நாக்பூர் விஜயம் செய்தார்கள். சர்க்கார் அதிகாரிகளும் ஏராளமான பக்தர் களும் சேர்ந்து பூர்ணகும்பம் முதலான மரியாதைகளுடன் வரவேற்றனர். பல்லக்கு உத்ஸவம் நடந்தது. 15௳ வரை இங்கு ஸரஸ்வதி வித்யாலயத்தில் தங்கி தினமும் ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவர பூஜை செய்து ஹிந்தியில் உபதேச உரை நிகழ்த்தினார்கள். பாத பூஜைகள் நடத்தியும் தீர்த்த ப்ரஸாதம் பெற்றும் பக்தர்கள் அருள் பெற்றனர். நாக்பூரில் குஜராத்தி சங்கம், R. S. S. சங்கம், கர்னாடக சங்கம், பாரதீ கிருஷ்ணாச்ரமம், பான்ஸ்லே ஸம்ஸ்கிருதக்கல்லூரி இந்த இடங்களுக்கு விஜயம் செய்து உபதேசம் செய்தார்கள். எல்லா இடங்களிலும் வரவேற்புப் பத்திர[illegible]வாசித்தளிக்கப்பட்டன.

15வ. நாக்பூரிலிருந்து புறப்பட்டு மத்யப்ரதேசத்தைச் சேர்ந்த பாண்டுர்ணாவுக்குச் சென்றுவிட்டு தப்திநதி உத்பத்தியாகுமிடத்தைப் பார்வையிட்டு பைடூலுக்கு விஜயம் செய்தார்கள். ஜில்லா கலெக்டர் முதலான அதிகாரிகளும் பொதுமக்களும் வரவேற்றனர். முனிசிபல் ஆபீஸில் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. பிறகு நர்மதா தீரத்திலுள்ள ஹோஷங்காபாதிலும் ஒபைதுல்லா கஞ்சிலும் தங்கிவிட்டு 21வ. மத்யபிரதேசத் தலை நகரான போபாலுக்கு விஜயம் செய்தார்கள்.

நகரவாசலில் மத்யப்ரதேச கவர்னர் ஸ்ரீ K. C. ரெட்டி அவர்கள், பிரதமமந்திரி சர்க்கார் அதிகாரிகள், பொது மக்கள் யாவரும் மஹா ஸந்நிதானத்தை வரவேற்று தங்கப்பல்லக்கில் ஊர்வலமாக பார்லிமெண்ட் மெம்பர்கள் தங்கும் ஜாகைக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு கவர்னர் வந்து ஆசார்யாளை தனியாக தரிசித்து ஆசிபெற்றார். இரவு சாரதா சந்திரமௌளீசுவர பூஜைக்கும் கவர்னர் மற்றும் பிரமுகர்கள் வந்து தரிசித்தார்கள். கவர்னர் தலைமையில் அமைக்கப்பட்ட வரவேற்பு கமிட்டியார் விரிவான ஏற்பாடுகள் செய்திருந்தனர். 22வ. மத்ய ப்ரதேச முக்ய மந்திரி ஸந்நிதானத்துடன் சிறிது நேரம் சம்பாஷித்தார். அன்று மாலை கம்யூனிடி ஹாலில் உபந்யாஸம் செய்தார்கள். ஏராளமான மக்கள் கூடியிருந்தனர். 23வ. பிர்லா கட்டியுள்ள வெகு நேர்த்தியான லக்ஷ்மீ நாராயண மந்திரத்திற்கும் லால்காடி சிவாலயத்திற்கும் சென்று தரிசித்தார்கள். 24வ. பிபாலனிக்கு விஜயம் செய்து கர்னாடக ஸங்கத்தாரும் மற்றவர்களும் செய்த பாதபூஜை பிக்ஷையை ஏற்றுக்கொண்டார்கள். பொகாரா ஹெவி எலெக்ட்ரிகல் பாக்டரிக்கும் டவுன்ஷிப்புக்கும் விஜயம் செய்தார்கள்.

25வ. போபாலிலிருந்து புறப்பட்டு ஆஷ்டாவுக்கும் 26வ. தேவாஸுக்கும் 27வ. இந்தூருக்கும் சென்று 29வ. உஜ்ஜயினிக்கு விஜயம் செய்தார்கள். நகரத்திலிருந்து 12 மைலுக்கு அப்பாலுள்ள க்வாலியர் ஸ்டேட் பார்டரான நரவரா என்ற இடத்தில் குவாலியர் மஹாராஜா ஸ்ரீ மாதவராவ் சிந்தியா அவர்களும் கலெக்டர் முதலான அரசாங்க அதிகாரிகளும், பொதுமக்களும் ஆயிரக்கணக்கில் கூடி ஐந்து குதிரைகள் முதலான ராஜ மரியாதைகளுடன் ஆசார்யாளை வரவேற்று உஜ்ஜயினி நகருக்கு அழைத்துச் சென்றனர். பிறகு மாதவநகர் எக்ஸ்டென்ஷனில் கண்டாகர் சமீபம் லக்ஷக் கணக்கில் மக்கள் கூடி பூர்ணகும்பம் முதலான மரியாதைகளுடன் வரவேற்று பல்லக்கில் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். உஜ்ஜயினி நகர்

முழுவதும் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மூன்று மைல் நீளத்தில் ஜனக்கூட்டம் ஊர்வலத்துடன் சென்றது. கோபால மந்திரத்தில் க்வாலியர் மகாராஜா வரவேற்று ஹஸ்தலாகவம் கொடுத்து அழைத்துச் சென்று தூளி பாத பூஜையும் ஸஹஸ்ர நாமார்ச்சனையும் நடத்தினர்.

கோபால மந்திரத்தில் 2 நாள் தங்கி மகா காலேச்வர க்ஷேத்ரம், காளிதாஸன் பூஜை செய்த காளி கோவில், விக்ரமாதித்யன் பூஜித்த துர்கா மந்திரம் முதலிய ஸ்தலங்களுக்குச் சென்று தரிசித்தார்கள்.

1—7—66 மாலை டவுனிலிருந்து 6 மைல் தூரத்தில் சிப்ரா நதிக் கரையில் அமைந்துள்ள கலியதே அரண்மனைக்கு விஜயம் செய்தார்கள். அங்கு மகாஜனங்கள் பூர்ணகும்பம் முதலான மரியாதைகளுடன் வரவேற்று தூளி பாதபூஜை செய்தார்கள்.

2—7—66 அன்று காலை 8 மணியிலிருந்தே ஜனங்கள் கூட்டம் கூட்டமாக வந்துகொண்டிருந்தார்கள். பாரதத்தின் பல பாகங்களிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் வந்திருந்தனர் கோயம்புத்தூர் பின்னி ஸ்ரீ சுப்பராவ், திருநெல்வேலி ஜில்லா தர்மாதிகாரி ஸ்ரீ M. ராமசுப்ரமண்யய்யர் மற்றும் பலர் தமிழ் நாட்டிலிருந்து வந்திருந்தனர். ஸ்பெஷல் பஸ் வசதி செய்யப்பட்டிருந்தது சாதுர்மாஸ்ய காலம் பூராவும் ஸ்பெஷல் பஸ் வசதி செய்திருக்கிறார்கள். வியாஸ பூஜையும் சாதுர்மாஸ்ய ஸங்கல்பமும் நடந்ததும் கூடியிருந்த சிஷ்யர்கள் சாதுர்மாஸ்ய காலத்தில் மஹா ஸந்நிதானத்திற்கு வேண்டிய வஸதிகளும் சுச்ரூஷையும் செய்து கிருதார்த்தர்களாவதாகக் கூறினார்கள். மஹாராஜாக்களும் பிரமுகர்களும் தங்கள் காணிக்கைகளைச் செலுத்தினார்கள். அகிலபாரத சங்கரஸேவா ஸமிதியின் சார்பில் 1100 ரூ பிக்ஷா வந்தன காணிக்கை ஸமர்ப்பித்து சிஷ்யர்களின் சார்பில் பாத பூஜையும் நடத்தப்பட்டது. சாதுர்மாஸ்யத்தைப்பற்றி ஸ்ரீ மஹா ஸந்நிதானம் ஹிந்தியில் உபன்யாஸம் செய்தார்கள். எல்லோருக்கும் அன்னதானம் செய்விக்கப்பட்டது.

செப்டம்பர் 18உ முதல் 29உ வரை கணபதி வித்வத் ஸதஸ் இங்கு நடக்கும். கவர்னர் K. C. ரெட்டி அவர்கள், முதன் மந்திரி D. P. மிச்ரா அவர்கள் மற்றும் பல பிரமுகர்களும் அகில பாரதத்திலிருந்தும் அநேகம் மஹாவித்வான்களும் கலந்து கொள்வார்கள்.

## விசேஷ தினங்கள்

| | | |
|---|---|---|
| ஆகஸ்ட் | 22, 29, செப். 5, 12 | சிராவண ஸோமவாரம் |
| ,, | 26 வெள்ளி | [illegible]ரலக்ஷ்மி விரதம் |

| | | | |
|---|---|---|---|
| செப்டம்பர் | 7 | புதன் | கோகுலாஷ்டமி |
| ,, | 18 | ஞாயிறு | வரஸித்தி விநாயக பூஜை |
| ,, | 18 | முதல் 29வ வரை | கணபதி வித்வத் ஸதஸ் |
| ,, | 26 | திங்கள் | வாமன ஜயந்தி |
| ,, | 28 | புதன் | அநந்த பத்மநுப விரதம் |
| ,, | 29 | வியாழன் | உமாமஹேச்வர விரதம் |

சாதுர்மாஸ்ய ஸங்கல்ப ஸமாப்தி விச்வரூப யாத்திரை

சென்னை : தியாகராயநகர் சிருங்கேரி சங்கரமடத்தில் 26-6-66 அன்று ஸ்ரீ K. சங்கரநாராயணய்யர் (Retd. Dt. Judge.) தலைமையில் அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி அங்கத்தினர்களின் கூட்டம் நடைபெற்றது. அடியில் கண்ட விபரப்படி தீர்மானிக்கப்பட்டது.

போஷகர்கள் : மாட்சிமை தங்கிய மைசூர் மகாராஜா,
செட்டிநாட்டு ராஜா ஸர் முத்தய்யா செட்டியார்

தலைவர் : ஸ்ரீ T. L. வெங்கடராமய்யர் (Retd. Judge, Supreme Court)

உபதலைவர்கள் : ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர், ஸ்ரீ K. சங்கர நாராயணய்யர், ஸ்ரீ I. A. சிதம்பரம் பிள்ளை, ஸ்ரீ P. ஸுப்ரமண்யம் (கல்கத்தா)

பொதுக்காரியதர்சி : ஸ்ரீ K. V. சுப்பரத்னம் அய்யர், ஈரோடு.

கூட்டுக்காரியதர்சி & பொக்கிஷதார் : ஸ்ரீ R. A. சட்டநாதய்யர், சென்னை.

நிர்வாகக் குழுவினர்கள் :

1. ஸ்ரீ V. வைத்யசுப்ரமண்ய அய்யர், சென்னை
2. ஸ்ரீ P. S. சுப்ரமண்யய்யர் ,,
3. ஸ்ரீ K. R. சுந்தரம் அய்யர் ,,
4. ஸ்ரீ K. பஞ்சாபகேசய்யர் நெரூர்
5. ஸ்ரீ K. R. வெங்கடராமய்யர், ஆசிரியர், ஸ்ரீ சங்கர க்ருபா
6. ஸ்ரீ S. ரத்னம் அய்யர், மானேஜர், ஸ்ரீ சங்கர க்ருபா, திருச்சி.
7. ஸ்ரீ S. வைத்யநாதய்யர், (Private Secretary to the Maharaja of Travancore) Trivandrum.
8. ஸ்ரீ K. சுப்பராவ் (பின்னி) கோயமுத்தூர்.
9. ஸ்ரீ K. ஹரிஹரய்யர், சென்னை
10. ஸ்ரீ R. ஹரிஹரய்யர், மதுரை
11. ஸ்ரீ N. V. நரஸிம்ஹமூர்த்தி, பங்களூர்,
12. ஸ்ரீ H. R. ஸ்ரீ [illegible]ய்யர், ஷிமோகா

[ மாட்சிமைதங்கிய மைசூர் மஹாராஜா அவர்கள், செட்டிநாடு ராஜா அவர்கள் இந்த இரு பிரபுக்களேயும் போஷகர்களாகக்கொண்டு டில்லி உயர் நீதிமன்றத்தை அலங்கரித்த அறிஞர் ஸ்ரீ T. L. வெங்கடராம அய்யர் அவர்கள் தலைமையில் தொண்டு செய்து வருவது என்பது நம் ஸமிதியின் பாக்யமே. காரியதர்சிகளுக்கு எல்லோரும் தங்கள் ஒத்துழைப்பு மூலம் உதவி செய்யவேண்டு மென்று வணக்கத்துடன் கோருகிறோம் ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தின் அருள் நமக்கு ஸகல வெற்றிகளேயும் அளிக்கும் — ஆசிரியர்.]

புதுடெல்லி : ராமகிருஷ்ணபுரத்தில் கோவை அட்வகெட் ஸ்ரீ V. A. கிருஷ்ணமூர்த்தி அய்யரால், வியாஸ பூர்ணிமையன்று ருத்ராபிஷேகம், பில்வத்தால் ஆசார்ய ஸஹஸ்ரநாமார்ச்சனை, லலிதா ஸஹஸ்ரநாமார்ச்சனை, தீபாராதனைகள் நடத்தப்பட்டன. புதுடெல்லி பாதுகாப்பு இலாகாவிலுள்ள ஸ்ரீ S. ஸ்ரீகண்டன் அவர்கள் கலந்து கொண்டார். இதையொட்டி காசி ஸ்ரீ ஸச்சிதாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகளால் பிரசுரிக்கப்பட்ட குருகீதை (ஸ்காந்தத்திலுள்ளது) பாராயணம் செய்யப்பட்டது.

ஸ்ரீரங்கம் : ஸ்ரீ சங்கர குருகுலத்தில் வியாஸ பூர்ணிமையன்று மஹாந்யாஸ பூர்வக ஏகாதசருத்ரஜபம், பஞ்சாமிருதம் முதலான திரவ்யங்களால் விசேஷ அபிஷேகம் ருத்ரத்ரிசதி அர்ச்சனை, தீபாராதனைகள் நடைபெற்றன. சிங்கப்பூர் ஸ்ரீ வெங்கடராம அய்யர் அவர்கள் அன்றையதினம் உபயம் முழுவதையும் ஏற்றுக்கொண்டதுடன், அம்பாளுக்குப் புடவையும் ஆதி ஆசார்யாளுக்கும், சிருங்கேரி ஸ்ரீ நரஸிம்மபாரதீ ஸ்வாமிகளின் மூர்த்திக்கும் காஷாய வஸ்திரமும் ஸமர்ப்பித்தார்கள்.

பொன்மலே : ஸ்ரீ சங்கர ஜயந்தீ மஹோத்ஸவக் கமிட்டியின் ஆதரவில் 22—6—66 அன்று Dr. V. L. ராமதுரை (Asst. Medical Officer, Goldenrock, Ry. Hospital) அவர்களின் கீதை பற்றிய உரையும் ஸ்ரீ V. நடராஜய்யர் (Yard Master, Tiruchi) அவர்களின் பஜனையும் நடைபெற்றன. 2—7—66 குருபூர்ணிமையன்று ஸ்ரீ சௌரிராஜன், ஸ்ரீ கிருஷ்ணராவ், ஸ்ரீ சங்கரநாராயணன் ஆகியோர் குரு பிரபாவம் பற்றிப்பேசினர்கள். ஸ்ரீ K. ரங்கநாதன் பக்த விஜயம் பற்றிப் பேசினர்.

சேரன்மாதேவி : சென்னராஜபுரத்தில் ஸ்ரீ P. S. அநந்த நாராயணய்யரால் தமது கிருஹத்தில் 5 நாட்கள் ருத்ராபிஷேகம், உபநிஷத் வேதபாராயணம் விசேஷ பூஜைகளுடன் சங்கரஜயந்தி உத்ஸவம் கொண்டாடப்பட்டது. ஆந்திர பிரதேசத்திலிருந்து சிருங்கேரி ஆசார்யாள் பிரஸாதம் அனுப்பினர்கள்.